# ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யார்
# ஸ்ரீ ஸுரேஸ்வராசார்யார்
# சரிதம்



ஸ்ரீ ஞானானந்த பாரதீ ஸ்வாமிகள் இயற்றியது

# ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யார்
# ஸ்ரீ ஸுரேஸ்வராசார்யார்
# சரிதம்

ஸ்ரீ ஞானானந்த பாரதீ ஸ்வாமிகள் இயற்றியது





ஸ்ரீ ஞானானந்த பாரதீ க்ரந்த ப்ரகாசன ஸமிதி
நங்கநல்லூர், சென்னை - 600 061.

2014

**Sri Sankara Bhagavatpadacharya and Sri Suresvaracharya**

*Written by:*

**Sri Jnanananda Bharathi Swamigal**

*(Formerly Sri R Krishnaswami Aiyar of Tirunelveli)*


First Edition : 1968

New Edition : 2014

*Kind Courtesy:*

Sri K Ramachandran ©

*Published by:*



**Sri Gnanananda Bharathi Grantha Prakasana Samithi** (Regd.)

Bharani Flats, 14, 4th Street, Lakshmi Nagar,

Nanganallur, Chennai 600061;

Phone: (91) 9940199915

Web : www.gnanananadabharathi.org

*Printing by:*

Sri. K. Narasimhan

Aaral Graphics, Chennai-600 094.

Ph: 2361 5979

*Books are available at*

**Sri Sharada Peetham, Sringeri**

E-Mail: publications@sringeri.net

# ஸமர்பணம்



சிருங்கேரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ பாரதீ தீர்த்த மஹாஸ்வாமிகளின் ஸன்னிதியில் இந்தப் பதிப்பு பக்தியுடன் ஸமர்ப்பணம் செய்யப்படுகிறது

# பதிப்புரை

ஸ்ரீ ஞானானந்த பாரதீ ஸ்வாமிகள் ஆங்கிலத்திலும் தமிழிலும், ஸ்ரீ சங்கரபகவத்பாதாள், ஸ்ரீ ஸுரேசுவராசார்யாள் இவர்கள் சரித்திர சுருக்கம் எழுதியிருந்ததைத் தெலுங்கில் மொழிபெயர்ப்பு செய்து ஹைதராபாத்தில் 1965ஆம் ஆண்டு புஸ்தகரூபமாக அச்சிட்டு வெளியிடப்பட்டிருந்ததை ஸ்ரீ சிருங்கேரி மஹாஸன்னிதானம் அவர்களிடம் ஸமர்ப்பிக்கப்பட்டது. அவர்கள், அதைப்பார்த்து அனுமோதனம் செய்து மற்ற பாஷைகளிலும் வெளியிடவேண்டுமென்று ஆக்ஞை செய்தார்கள். அதை அனுஸரித்து 1968ஆம் ஆண்டு மதுரை ஜில்லா மேல்மங்கலம் ஆஸ்திக மஹாஜன ஸபா, சின்னமனூர் பீதாம்பரம் ஸ்ரீ C. M. கிருஷ்ணய்யர், சென்னை ஸ்ரீ V. வைத்யஸுப்ரமணிய அய்யர் அவர்களுடைய உதவியின் பேரில் இங்கிலீஷ் மற்றும் தமிழ் பிரதிகளை அச்சிட்டு 1968ஆம் ஆண்டு ஸ்ரீ சங்கர ஜயந்தி தினத்தன்று ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு மஹா ஸன்னிதானம் அவர்கள் பாதாரவிந்தங்களில் பக்தி புரஸ்ஸரமாக ஸமர்ப்பித்தார்கள்.

ஆஸ்திகர்களின் வேண்டுகோளின்படி, இதன் மறு பதிப்பு ஆங்கிலத்தில் 2013லும் தற்போது தமிழிலும் சிருங்கேரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஸ்ரீ பாரதீ தீர்த்த மஹாஸ்வாமிகளின் நல்லாசியுடன் வெளியிடப்படுகிறது.

இக்கிரந்தத்தை ஆஸ்திகர்கள் வாசித்து ஸ்ரீமத் ஆசார்யாள் அவர்களுடைய அனுக்ரஹத்துக்குப் பாத்திரர்களாகுமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

*ஸ்ரீ ஞானானந்த பாரதீ க்ரந்த ப்ரகாசன ஸமிதி*

February 2014 — நங்கநல்லூர், சென்னை

# அட்டவணை

**श्रीगुरुभ्यो नमः**

ஸ்ரீ குருப்யோ நம:

## முதல் பாகம்

# ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யார்

## 1. பால்யம்

இப்புண்ணிய பூமியான பாரத வர்ஷத்தின் தென்மேற்கு மூலையிலுள்ள கேரள தேசத்தில் பிரவஹிக்கும் பூர்ணா நதியின் வடகரையில் விளங்கிவரும் காலடி என்னும் கிராமத்தில் சுமார் 12 நூற்றாண்டுகளுக்கு முன் லௌகிக வைதிக ஸம்பத்துக்கள் நிறைந்து வித்யாதி ராஜர் என்ற பிரஸித்தியுடன் ஒரு நம்பூதிரி பிராஹ்மணோத்தமர் இருந்து வந்தார். அவருக்கு சிவகுரு என்ற ஒரே புத்ரர். அப்புத்ரர் தன் பரம்பரா தர்மத்திற்குத் தக்கபடி ஆசாரபரராயும் வித்யாப்யாஸம் செய்தவராகவும் இருக்கையில், தான் பிரஹ்மசாரியாகவே இருந்துவர நினைத்தபோதிலும், தன்னுடைய குருநாதருடையவும் பெற்றோர்களுடையவும் வேண்டுகோளுக்கு இசைந்து, மகபண்டிதர் என்பவரின் புத்திரியான ஆர்யாம்பாளை மணந்தார். அவளுடன் முறைப்படி ஸகல இல்லற தர்மங்களையும் அனுஷ்டித்துக் கொண்டிருக்கையில், வெகு வருஷங்கள் சென்றும் ஸந்தானம் ஏற்படவில்லை. ஆர்யாம்பாளின் கோரிக்கைப்படி அவள் பர்த்தா அவளையும் அழைத்துக்கொண்டு, இப்பொழுது திருச்சூர் என்று சொல்லப்படுகிற விருஷபாசலேசுவர க்ஷேத்ரம் சென்று, அங்கு ஸாந்நித்யமடைந்திருக்கும் பரமசிவனை இடைவிடாமல் உபாஸித்து

வந்தார். அப்படியிருக்கையில், ஒரு நாள் இரவு சிவகுரு பண்டிதரின் ஸ்வப்னத்தில் பகவான் தோன்றி, "சிரஞ்ஜீவியாய் அக்ஞனாக ஒரு புத்ரன் வேண்டுமா, அல்பாயுஸ் உள்ள ஸர்வக்ஞனாக ஒரு புத்ரன் வேண்டுமா?" என்று வினவினார். ஸர்வக்ஞனே வேண்டுமென்று அவர் சொன்னதின் பேரில், அவ்விதமே அனுக்ரஹித்துவிட்டு பரமேசுவரன் மறைந்தார். பிறகு ஆர்யாம்பிகை கர்ப்பவதியாகி கிரமப்படி வைசாக சுத்த பஞ்சமீ தினம் ஒரு அழகான புத்ரனைப் பெற்றாள். இவ்விதம் புத்ரப்பேரளித்த பகவானிடம் மிகவும் க்ருதக்ஞதையுடன் ஆனந்தமடைந்த பெற்றோர்கள் அப்பகவானின் திருநாமங்களில் க்ஷேமத்தைச் செய்கிறவர் என்ற பொருளுடைய *சங்கர* என்ற பெயரையே குழந்தைக்குச் சாற்றினார்கள். அந்த நாமம் எவ்வளவு பொருத்தமானதென்பது அவர் சரித்திரத்தின் மூலமாகவே விளங்கும்.

மூன்றாவது வயதிற்குள்ளாகவே வாசிக்கவும், எழுதவும் ஸாமர்த்யம் பெற்று விளங்கி காவ்யம் முதலான ஸகல கிரந்தங்களையும் கிரஹித்துவிட்டதைப் பார்த்து கவனித்த சிவகுரு, வெகு புத்திசாலியாயிருந்தால் ஐந்தாவது வயதிலேயே உபநயனம் செய்விக்கலாமென்று சாஸ்திரம் அனுமதிப்பதால் அவ்விதமே செய்ய வேண்டுமென்று கருதினார். ஆனால் தைவ கதி அதற்கு இடம் கொடுக்காமல், அவர் இவ்வுலகைவிட்டுப் போகவேண்டியதாக ஏற்பட்டுவிட்டது. அதன் பிறகு, பந்துக்கள் மூலமாகவே தாயார் உபநயனத்தைச் செய்துவைத்தாள். தகுந்த குருவினிடம் அனுப்பப்பட்டு, மற்றவர்கள் கற்றுக்கொள்ள வருஷக்கணக்காக ஆகக்கூடிய விஷயங்களை ஒரே நாளில் கற்றுக்கொள்ளக்கூடிய யோக்யதையிருந்தபடியால், வெகு சீக்கிரமாகவே வித்யாப்யாஸத்தை முடித்துக்கொண்டு, நல்ல ஆழ்ந்த வித்வான் என்ற முறையிலேயே எட்டாவது வயதிற்குள் குருகுலத்திலிருந்து திரும்பி கிருஹம் வந்து சேர்ந்தார்.

கிருஹத்தில் வந்து தாயாருக்குப் பணிவிடையை வெகு பக்தியுடன் செய்து வந்த ஸமயத்திலும், தன் பிரஹ்மசர்யாசிரமத்திற்குரிய பிக்ஷாடனத்தை விட்டுவிடவில்லை.

ஒரு நாள் ஒரு கிருஹத்தில் பிக்ஷைக்காகப் போன ஸமயம் அந்த வீட்டு கிருஹஸ்தர் அங்கில்லாமல் அவர் பார்யை மாத்திரம் இருந்தாள். பிக்ஷையிடுவதற்குக்கூட ஸௌகர்யமில்லாத நிலைமையில் அக்குடும்பம் இருந்துவந்தது. எங்கேயோ தேடியெடுத்து ஒரு உலர்ந்த நெல்லிக்கனியை எடுத்து, தன்னுடைய வறுமையை நினைத்து கண்களில் நீர் ததும்ப பிக்ஷா பாத்திரத்தில் போட்டாள். அவளுடைய சுத்தமான அந்தக்கரணத்தைக் கண்டு அவளுடைய எளிமையில் அனுதாபம் ஏற்பட்டு, ஐசுவர்யத்திற்கு அதிதேவதையான மஹாலக்ஷ்மியை பிரார்த்தித்தார். ஆனால் அவளுடைய கருணைக்குப் பாத்திரமாகும்படிக்கான பூர்வ புண்ணியம் அந்த அம்மாளிடம் இல்லையென்ற காரணத்தால் தேவி மறுத்துவிட்டாள். அதன்பேரில் தனக்கு மனம் உருகி நெல்லிக்கனியை அளித்ததற்காகவாவது பலனை உடனே கொடுக்க வேண்டுமென்று இவர் கேட்டுக்கொண்டதன்பேரில் தங்க நெல்லிக்கனிகளாகவே சொரிந்துவிட்டாள். அந்தம்மாளின் ஸந்ததியார்கள் இன்னமும் தனிகர்களாகவே இருந்துகொண்டு "*ஸ்வர்ணத்து மனைக்கல்*" என்று அழைக்கப்படுகிறார்களென்பது குறிப்பிடத்தக்கது. அப்பொழுது தேவியை பிரார்த்தனை செய்த சுலோகங்களே "*கனகதாரா ஸ்தோத்ரம்*" என்ற பெயருடன் பிரஸித்தமாய் இப்பொழுதும் அதை பக்தியுடன் சொல்பவர்களுக்கு வறுமை நீங்கிவிடுகிறதென்பது யாரும் அறிந்த விஷயம்.

அக்காலத்தில் பூர்ணா நதி அவர் வீட்டிலிருந்து தூரத்தில் இருந்தபடியால், ஒரு நாள் அவர் தாயார் நதியில் நீராடிவிட்டுத் திரும்புகையில் வெய்யிலினாலும் பலஹீனத்தினாலும் களைப்படைந்து வழியில் கொஞ்சம் தங்கியே வரும்படி ஏற்பட்டது. இந்த நிலையை உணர்ந்த ஸ்ரீ சங்கரர் அந்நதிதேவதையிடம் தன் கிருஹத்தின் அருகில் பிரவஹிக்கவேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டார். மறுநாள் காலையில் பார்க்கும்போது அப்படியே வீட்டின் அருகில் நதியிருப்பதைக்கண்டு யாவரும் ஆச்சர்யமடைந்தார்கள். இப்பொழுது நதி பிரவஹிக்கும் இடத்திலிருந்து கொஞ்ச தூரத்தில் முன்னிருந்த பிரதேசத்தில் இன்னமும் பள்ளமாகவே தெரிகிறது.

இவருடைய ஞானத்தையும் மஹிமையையும் பற்றிக் கேள்விப்பட்ட அப்பொழுதுள்ள கேரள தேசத்து அரசர் விலையுயர்ந்த காணிக்கைகளுடன் தன் மந்திரியை அனுப்பினார். தனக்கு எதுவும் தேவையில்லாததினால் அக்காணிக்கையைப் பெற்றுக்கொள்ள இவர் மறுத்துவிட்டபடியால், அவ்வரசனே நேரில் வந்து அதிகமான காணிக்கைகளை ஸமர்ப்பணம் செய்துவிட்டு, தான் எழுதியுள்ள மூன்று நாடகங்களை பார்வையிட்டு அனுக்ரஹிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டான். முன்போலவே அக்காணிக்கைகளை மாத்திரம் பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டு, அந்நாடகங்களைப் பார்த்துவிட்டதுடன் அவ்வரசனுக்கு புத்ர ஸந்ததி ஏற்படுமென்று அனுக்ரஹித்தார்.

## 2. ஸன்யாஸம்

இந்த அபூர்வமான புத்ரரிடம் அவருடைய தாயார் அபூர்வமான ப்ரீதியை வைத்திருந்தாள் என்பதில் ஆச்சர்யப்படுவதற்கொன்றுமில்லை. அவர் சீக்கிரமாகவே விவாஹம் செய்துகொண்டு க்ருஹஸ்த தர்மத்தையனுஷ்டித்துவந்து தன்னையும் வயதுகாலத்தில் ரக்ஷித்துவரவேண்டுமென்று எதிர்பார்த்தாள். ஆனால் அவருக்கோ வேறு உத்தேசமிருந்தபடியால் விவாஹப்பேச்சுக்கே இடம் கொடுக்கவில்லை. இப்படியிருந்து வருகையில், ஒரு நாள் காலையில் நதியில் ஸ்நானம் செய்வதற்காகத் தாயாரும் புத்ரரும் போய், தாயார் ஸ்நானம் செய்து கரையேறின பிறகும், ஜலமத்தியில் ஸ்ரீ சங்கரர் இருக்கும்போது, ஒரு முதலை அவர் காலைக் கவ்விக்கொண்டு பிரவாஹத்திற்குள் இழுக்க முயன்றது. எல்லா பாபங்களுக்கும் பிராயச்சித்தமாக ஸன்யாஸம் ஏற்பட்டிருக்கிறதென்பதுடன் ஸன்யாஸம் பெற்றாலே மறுபிறப்பு என்றும் காணுவதால், தான் உடனே ஸன்யாஸம் பெற்று இவ்விதம் மறு பிறப்பை அடைந்துவிட்டால், ஒருக்கால் இந்த முதலையின் வாயில் அகப்பட்டுக்கொண்டு இறப்பது தடைபடலாமென்ற காரணத்தினால் தனக்கு ஸன்யாஸத்திற்கு அனுமதி கொடுக்கவேண்டுமென்று

தாயாரை வேண்டிக்கொண்டார். ஸன்யாஸியாகிவிட்டாலும் உயிருடன் இருந்து பார்க்கக்கூடிய நிலையிலிருக்கலாமே என்ற ஆஸ்தையின் பேரில் ஒருவிதமாக ஸமாதானப்படுத்திக்கொண்டு அவள் அனுமதி கொடுத்தாள். ஸன்யாஸாசிரமத்திற்கு பிரேக்ஷோச்சாரணத்தைச் செய்தவுடன் முதலையும் தன் பிடிப்பை விட்டுவிட்டது.

தன் தாயார், கிருஹம், கிராமம் எல்லாவற்றையும் பரித்யாகம் செய்துவிட்டு ஸ்ரீ சங்கரர் புறப்படவேண்டிய நிலை வந்துவிட்டது. ஏக புத்ரரான இவர் கையால் தனக்கு அந்த்ய ஸம்ஸ்காரம்கூடக் கிடையாமல் போய்விடுமே என்று திடுக்கிட்டு, அவரே நேரில் வந்து அந்த ஸம்ஸ்காரத்தைச் செய்வதான உறுதியை வற்புறுத்திக் கேட்டு வாங்கிக்கொண்டாள். அவ்விதமே வாக்குக்கொடுத்துவிட்டு ஊரை விட்டுப் புறப்படும் ஸமயத்தில், நதியின் போக்கை மாற்றின காரணத்தினால் ஸ்ரீ கிருஷ்ண பகவானின் கோவில் பாதிக்கப்படுவதால் அங்கிருந்த மூர்த்தியை வேறிடத்திற்குக் கொண்டுபோய் வைக்கும்படி அசரீரி வாக்கு ஏற்பட்டது. அப்படியே அந்த மூர்த்தியை அப்புறப்படுத்தி தாயார் வஸித்துவரும் கிருஹத்திற்கு ஸமீபத்திலேயே பிரதிஷ்டை செய்துவிட்டார்.

ஆர்யாம்பாள் சில ஸமயங்களில் விருஷபாசலேசுவரர் தர்சனத்திற்குப் போய்வந்திருந்தபடி போகமுடியாமல் சரீரத்தில் தளர்ச்சி ஏற்பட்டிருக்கும்போது, ஒருநாள் ஸ்வப்னத்தில் பகவானே தர்சனம் கொடுத்து, மறுநாள் காலையில் ஒரு வெள்ளை மான் துள்ளி விளையாடும் ஒரு சிறுகுளத்தின் அருகில் தானே ஸாந்நித்யமடைவதாகச் சொன்னார். அப்படியே மறுநாள் பார்க்கையில் வீட்டிலிருந்து கொஞ்ச தூரத்திலுள்ள குறிப்பிட்ட பிரதேசத்தில் ஒரு லிங்கம் புதிதாக ஆவிர்பாவமடைந்திருப்பதைக்கண்டு யாவரும் ஆச்சர்யமடைந்து அதுமுதல் அந்த லிங்கத்தை விருஷபாசலேசுவரர் என்றே பாவித்து அவளும் மற்றவர்களும் ஆராதித்து வந்தார்கள். இவ்விதமாக அவளுடைய முதிர்ந்த வயதிலும் பக்தியுடனேயே காலம் கழிப்பதற்கு வேண்டிய ஸகல ஸௌகர்யங்களும் ஏற்பட்டன.

மஹத்தான ஆபத்து ஏற்பட்ட ஸமயத்தில் எவ்விதமான சடங்குமன்னியில் ஸன்யாஸம் பெற்றபடியால், இப்பொழுது ஆபத்து நீங்கிவிட்டபோது கிரமப்படி குருவைத்தேடி உபதேசம் பெற்று ஒழுங்குப்படுத்திக் கொள்ள வேண்டியிருந்தது. அவ்விதமே குருவைத் தேடிப் போகையில் நர்மதா நதியின் ஆரம்பப் பிரதேசங்களிலுள்ள ஒரு குஹையில் ஸ்ரீ கோவிந்த பகவத் பாதாசார்யாரை அடைந்தார். அப்பொழுது அவர் இவரைப் பார்த்து "நீ யார்?" என்று கேட்டார். அதற்கு இவர் உடனே ஆத்மாவை மறைத்துக்கொண்டு தானே ஆத்மா போலத்தோன்றி வரும் அநாத்மாம்சங்களையெல்லாம் விலக்கிவிட்டால், மீதமிருக்கும் சாசுவதமான ஸத் வஸ்துவே நான் என்று வெகு தெளிவாக எடுத்துரைத்தார். அப்பொழுது வெளியிட்ட பத்து சுலோகங்களே "தச சுலோகீ" என்று பிரஸித்தியடைந்திருக்கின்றன. இவர் வாஸ்தவத்தில் ஆத்ம ஸாக்ஷாத்காரம் அடைந்தவரென்றும், ஸம்பிரதாயத்திற்காகத் தன்னிடம் உபதேசம் பெற இவர் வந்திருக்கிறாரென்றும் அம்மஹான் உணர்ந்து, இவரை அப்படியே தன் சிஷ்யராக கிரஹித்துக் கொண்டு, சில நாட்கள் அங்கேயே தங்கும்படி உத்தரவிட்டார். பிறகு சில நாட்கள் சென்ற பிறகு பிரஹ்ம ஸூத்ரத்திற்கு பாஷ்யம் எழுதும்படி சொல்லியதின்பேரில், இவர் விசுவநாதரால் ஆளப்பட்டு வித்வான்களுக்கெல்லாம் கேந்திர ஸ்தானமாக விளங்கும் காசீ க்ஷேத்ரம் சென்றார்.

## 3. காசீ வாஸம்

இவ்விடத்தில்தான் உபநிஷத் தத்வத்தை இவர் நன்கு கிரஹித்திருக்கிறாராவென்று பரீக்ஷிப்பதற்குப் போல், ஸ்ரீ விசுவேசுவரர் ஒரு நாள் இவர் முன் சண்டாளவேஷத்துடன் நின்றார். வழக்கப்படி சாஸ்த்ரீய ஆசாராத்தையனுஸரித்து, இவர் அவரை விலகும்படி சொன்னதின்பேரில், அவர் " எதிலிருந்து எதை விலகச் சொல்லுகிறீர்? சரீரமென்றால் அது எப்பொழுதுமே அசுத்தம். ஆத்மாவென்றால் அது எப்பொழுதுமே சுத்தமாகையால்

அசுத்தப்படுத்தவே முடியாது'' என்றார். ஆத்மாவிற்கும் அநாத்மாவிற்கும் உள்ள பேதத்தை இவ்வளவு தெளிவாய் அறிந்திருக்கிறவர் எல்லோராலும் மதிக்கத்தக்க ஆத்மக்ஞானியாகவே இருக்கவேண்டுமென்று தீர்மானித்து ஸ்ரீ சங்கரர் தன்னுடைய மனோபாவத்தை ''மனீஷா பஞ்சகம்'' என்கிற ஐந்து சுலோகங்களால் வெளியிட்டார். பிறகு விசுவேசுவரர் தன் ஸ்வரூபத்தைக் காட்டி, பிரஹ்மஸூத்ரங்களுக்கும் பாஷ்யம் எழுதும்படிக்கும், உபநிஷத் ஸித்தாந்தத்தை நன்குரைத்து உலகத்தில் பிரசாரம் செய்யும்படிக்கும் உத்திரவிட்டு அந்தர்த்தானமடைந்தார்.

இந்தப் புண்ய க்ஷேத்ரத்தில்தான் சோழதேசத்திலிருந்து ஒரு யுவா குருவைத்தேடி வந்து ஸ்ரீ சங்கரரிடம் பணிந்து சரணமடைந்து அவரிடமிருந்து ஸந்யாஸம் பெற்றார். இவரே ஸ்ரீசங்கரரின் முதலாவது சிஷ்யராகிய ஸனந்தனாசார்யார் ஆவார். அவர் எவ்வளவு தூரம் தன்னையே குருநாதரிடம் அர்ப்பணம் செய்திருந்தார் என்பது பல ஸம்பவங்களினால் தெரிகிறது. முதலாவதாக, ஒரு நாள் அவர் கங்கையின் மறுகரையிலிருக்கும் போது இக்கரையிலிருந்த குருநாதர் அழைத்தவுடன் குறுக்கேயிருந்த நதீப்ரவாஹத்தைப் பொருட்படுத்தாமல் நேரே நடந்து செல்ல ஆரம்பித்துவிட்டார். இவருடைய பக்தியை மெச்சி கங்காதேவி இவர் கால் வைக்கிற இடத்திலெல்லாம் தாங்கும்படி தாமரைகளைத் தோற்றுவித்தாள். ஸ்ரீ சங்கரர் இவரிடம் விசேஷ அபிமானம் வைத்திருப்பதாக நினைத்து கொஞ்சம் அஸூயையடைந்திருந்த மற்றவர்கள் இந்த ஸம்பவத்தைப் பார்த்து வியந்து தங்கள் மனோபாவத்தைத் திருத்திக்கொண்டார்கள். இவ்விதம் கால்வைத்த இடமெல்லாம் தாமரை தோன்றினபடியால் இவருக்கு பத்மபாதர் என்ற பெயரையே குருநாதர் சூட்டினார்.

இந்தப் புண்ய ஸ்தலத்தில்தான் ஸ்ரீ வியாஸபகவானை தரிசித்து வணங்க ஸ்ரீ சங்கரருக்கு அவகாசமேற்பட்டது. ஸ்ரீ வியாஸருடைய ஸூத்ரங்களுக்கு சரியானபடி தாத்பர்யம் சொல்ல தைர்யம் வந்ததா என்று ஆச்சர்யத்தை வெளியிட்டு ஒரு நாள் ஒரு கிழவர் அங்கு தோன்றி, ஜீவன் இச்சரீரம் விட்டு லோகாந்தரம் போகும் போது

பூதஸூக்ஷ்மங்கள் அவனுடன் போகின்றனவா என்ற விஷயத்தை விசாரித்திருக்கும் ஒரு ஸூத்ரம் ஸம்பந்தமாக ஸ்ரீ சங்கரரைக் கேட்டார். கேட்டதற்கு ஸமாதானம் சொன்னதும், மேல் மேல் ஆக்ஷேபணைகள் செய்ததில் இந்த வாக்குவாதத்தில் இருவரும் தோல்வியடையாமலே வெகு நாட்கள் வரை வியவஹாரம் நடந்து கொண்டிருந்தது. அக்கிழவரின் அபார சக்தியைக் கண்டு வியந்த பத்மபாதர் தன் ஞானதிருஷ்டியால் அவர் ஸ்ரீ வைகுண்டபதியின் அம்சமான ஸ்ரீ வியாஸர் என்றும் தன் ஆசார்யார் ஸ்ரீ கைலாஸபதியின் அம்சமென்றும் தெரிந்துகொண்டார். உடனே எழுந்திருந்து வணங்கி "விஷ்ணுவும் சிவனும் தத்வார்த்தத்தைப்பற்றி முடிவடையாத விவாதத்தில் ஈடுபட்டுக்கொண்டிருந்தால் என்னைப் போலுள்ள ஸாமான்ய ஜனங்கள் என்ன செய்யமுடியும்?" என்று முறையிட்டார். பிறகு ஸ்ரீ வியாஸர் தன் வாஸ்தவ ஸ்வரூபத்தைக்காட்டி தன் ஸூத்ரங்களுக்கு ஸ்ரீ சங்கரர் தாத்பர்யமாகக் காட்டியிருப்பதே சரியென்று தன் ஸம்மதத்தைத் தெரிவித்து விட்டு, ஸ்ரீ சங்கருடைய ஆயுஸ் ஸந்யாஸத்தினால் 16 வயதானது பூர்த்தியாகும் தருணத்திலிருந்ததால் இன்னம் 16 வருஷகாலம் இவ்வுலகத்திலிருந்து பாரததேசம் ஆஸேது ஹிமாசலம் ஸஞ்சாரம் செய்து அவைதிகக் கொள்கைகளையும் அனுஷ்டானங்களையும் கண்டித்து ஆபாஸமாகவும் பிசகாகவுமிருக்கும் யுக்திகளை நிராகரித்து உபநிஷத் பிரதிபாத்யமான ஸித்தாந்தத்தை முன்னுள்ளபடி சுத்தமான ரீதியில் நிலைநாட்டும்படி ஆக்ஞை செய்தார்.

## 4. குமாரில பட்டரும் விசுவரூபரும்

பிறகு ஸ்ரீசங்கரர் காசியிலிருந்து அப்படியே விஜய யாத்திரையாகப் புறப்பட்டு வருகையில், வேதமே உத்தமமான பிரமாணமென்றும், அதில் கண்ட கர்மமே சிரேயஸ் ஸாதனமென்றும் ஸ்தாபித்து தன்னுடைய பிரசாரத்தினால் பௌத்தமதத்தை வேருடன் அறுத்துவிட்டு ஆனால் ஈசுவரதத்வத்தை ஒப்புக் கொள்ளாதவர்போல் தெரிந்த ஸ்ரீ குமாரில பட்டர் என்பவர், தான் பால்யத்தில்

பௌத்தகுருக்களிடம் அம்மத ஸூக்ஷ்மங்களைக் கற்றுக் கொண்டு பின்னால் அவர்களையே கண்டிக்கும்படி ஏற்பட்டதினால் உண்டான பாபத்திற்கு பிராயச்சித்தமாக உமிக்குவியலில் தீயிட்டு அதிலிருந்தபடியே மரணமடையத் தீர்மானித்திருக்கிறார் என்ற ஸமாசாரம் ஸ்ரீ சங்கருக்குத் தெரியவந்தது. உடனே அவர் இருந்த இடமான பிரயாகை க்ஷேத்திரத்திற்குச் சென்று, அவரை மறுபடியும் எழுந்திருக்கும்படி எவ்வளவு சொல்லியும், அவர் தான் செய்துவரும் பிராயச்சித்தத்தைப் பாதியில் விட்டு விடுவது நியாயமில்லையென்றும், இந்த நிலையில்லாமலிருந்தால் தானே ஸந்தோஷமாக ஸ்ரீ சங்கரரின் ஸூத்ரபாஷ்யத்திற்கு விஸ்தாரமாக வ்யாக்யான ரூபமாகக் காரிகைகள் எழுத முடிந்திருக்குமென்றும், அதற்கு இடமில்லாமல் போய்விட்டபடியால் கடைசி வரையில் தன் ஸமீபத்திலிருந்து அனுக்ரஹிக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார். ஈசுவரனுடைய ஸத்தையை ஒப்புக்கொள்ள அவசியமில்லாமல் கர்மாவிற்கே பிராதான்யம் கொடுத்த அம்சம் பிசகென்று எடுத்துக் காட்டுவதற்காகவே தான் வந்ததாக ஸ்ரீ சங்கரர் சொன்னதின் பேரில், தான் ஸம்பந்தப்பட்டமட்டில் விவாதமன்னியிலேயே ஒப்புக் கொள்ளுவதாகவும், வாதம் செய்ய அபிப்ராயமிருந்தால் நர்மதா நதீ தீரத்தில் மாஹிஷ்மதீ என்ற நகரத்தில் வஸித்து வரும் திருடமான கர்மடரென்று பிரஸித்தி பெற்றிருக்கும் தன் அருமை சிஷ்யனான விசுவரூபரைக் கண்டு வாதம் செய்யலாமென்றும் சொன்னார்.

ஸ்ரீ குமாரில பட்டர் காலமான பிறகு அங்கிருந்து நேரே மாஹிஷ்மதி நகரம் சென்றார். அங்கே விசுவரூபரின் கிருஹம் எங்கேயென்று விசாரிக்கையில் எந்த வீட்டு வாசலில் உள்ள கூண்டுகளில் இருந்து வந்த கிளிகள் கூட வேதப்ராமாண்யம், கர்மாவின் சக்தி, ஈசுவரனின் ஸத்தை, முதலிய விஷயங்களைப் பற்றியே பேசிக் கொண்டிருக்கின்றனவோ அதுவே அவர் கிருஹமென்று வழி காட்டப்பட்டார். அப்படியே ஸ்ரீ சங்கரர் அவர் வீட்டிற்குப் போனதில் உள்ளே தாளிடப்பட்டிருக்கக்கண்டு தன் யோக சக்தியினால் உள் சென்று நின்றார். தாளிடாமல்

சாற்றியிருந்தாலே கதவைத் திறந்துகொண்டு ஸன்யாஸி வீட்டிற்குள் நுழையக் கூடாதென்றும், கதவைத் தட்டக்கூடாது என்றும் நியமங்கள் இருக்கையில் இந்த விசுவரூபரின் தீவிரமான கர்ம வேகத்தை மாற்ற எண்ணியே ஸ்ரீ சங்கரர் இவ்விதம் பிரவேசித்தார். பிரவேசித்த ஸமயம் விசுவரூபர் சிராத்தம் செய்து பிராஹ்மணர்களுக்கு போஜனம் செய்து வைக்க ஆரம்பிக்கும் தருணம். இந்த ஸ்திதியில் விசுவரூபருக்கு கோபம் ஏற்படுவது நியாயமேயாகும். சில கடினமான வார்த்தைகளை பிரயோகித்தார். அதற்கெல்லாம் மிருதுவாகவே ஸ்ரீ சங்கரர் சொன்ன உத்திரங்கள் அவருடைய கோபத்தையே விருத்தி செய்தன. பிறகு அங்கிருந்த பிராஹ்மணர்களே குறுக்கிட்டு, வந்திருக்கும் ஸந்யாஸியை மஹாவிஷ்ணு ஸ்தானத்தில் வரித்து சிராத்தத்தை மேல் நடத்தும்படி சொன்னார்கள். ஆனால், ஸ்ரீ சங்கரர், தான் இந்த ஆஹாரத்தையுத்தேசித்து வரவில்லை, வாத பிக்ஷைதான் தனக்குத் தேவை என்றும் சொன்னார். விசுவரூபர் பிரம்மதேவனின் அம்சம் போலவே அவர் பார்யை உபயபாரதீ என்பவள் ஸரஸ்வதியின் அம்சமானதினால், அவளையே மத்யஸ்தமாக வைத்துக் கொண்டு மறு நாள் முதல் வாதம் ஆரம்பிப்பதாகத் தீர்மானிக்கப்பட்டது. பண்டிதர்களுக்கெல்லாம் அலங்காரமாயிருந்து வந்ததால் விசுவரூபருக்கு "*மண்டனமிச்ரர்*" என்ற அடைமொழியும், அவர் பார்யை வெகு ரஸவத்தாகப் பேசுவதால் அவளுக்கு "*ஸரஸவாணி*" என்ற அடைமொழியும் ஏற்பட்டிருந்தன.

மறுநாள் அப்படியே ஸ்ரீ சங்கரரும் விசுவரூபரும் வாதம் செய்ய ஆரம்பிக்கும் முன் அவரவர்கள் ஸித்தாந்தங்களைத் தெளிவுபடுத்தினார்கள். வாதம் வீண்வாதமாகப் போய் விடக்கூடாதென்ற எண்ணத்துடன் வாதத்தில் தோற்றவர் ஜயித்தவருடைய ஆசிரமத்தை அவலம்பிக்க வேண்டுமென்று சபதம் செய்து கொண்டார்கள். மத்யஸ்தையாக வரிக்கப்பட்ட உபயபாரதீ தனக்கு கிருஹ கிருத்யங்களை கவனிக்க வேண்டிய பொறுப்பு இருப்பதினால், வாதஸமயத்தில் தானும் கூடவே இருந்து வருவது ஸாத்யமில்லையென்றும், இருவரும் அணிந்து

கொள்ளும்படி இரண்டு மாலைகள் கொடுப்பதாயும், எவர் கழுத்தில் உள்ள மாலை முதலில் வாடுகிறதோ அவரே தோல்வியடைந்தவரென்று தீர்மானித்துக் கொள்ள வேண்டியதென்றும் சொல்லி விட்டாள். அப்படியே விவாதம் ஆரம்பித்து மும்முரமாக நடந்து வருகையில் எட்டாவது நாளில் விசுவரூபர் அணிந்து வந்த மாலை வாட ஆரம்பித்தது. பிரதி தினம் ஸ்ரீ சங்கரரை பிக்ஷைக்கும் விசுவரூபரை போஜனத்திற்கும் அழைத்து வந்த உபயபாரதீ அன்றைய தினம் இருவரையுமே பிக்ஷைக்கு என்று அழைத்தபடியால், தன் பர்த்தா தோல்வியடைந்து விட்டதாயும் ஸன்யாஸம் பெறவேண்டிய ஸந்தர்ப்பம் ஏற்பட்டு விட்டதாயும் குறிப்பிட்டாள்.

ஆனாலும் பர்த்தாவின் பாதிபாகமாகிய தன்னையும் ஜயித்தாலொழிய ஸ்ரீசங்கரர் பூராவாக வெற்றியடைந்தவராக மாட்டாரென்று சொல்லி உபயபாரதீயும் வாதத்திற்கு ஆரம்பித்தாள். எந்த சாஸ்திரத்திலும் அவர் நிபுணராக இருந்தபடியால் அவருக்கு பரிசயமில்லாத காம சாஸ்திரத்தில் கேள்வி கேட்க ஆரம்பித்தாள். அதற்கு பதில் சொல்வதற்குத் தனக்கு கொஞ்சம் அவகாசம் வேண்டுமென்று கேட்டுக் கொண்டு ஸ்ரீ சங்கரர் அங்கிருந்து புறப்பட்டுவிட்டார். போகும் வழியில் தன் சிஷ்யர்களே எவ்வளவோ தடுத்தும் கேட்காமல், ஸமீபகாலத்தில் இறந்திருந்த அமருகன் என்ற அரசனின் சரீரத்தில் தன் யோகசக்தியினால் பிரவேசித்தார். உடனே அவ்வரசன் மறுபடியும் ஜீவித்து விட்டதாக அவருடைய மந்திரிகளும் ஸ்திரீகளும் வெகு ஸந்தோஷத்துடன் மறுபடியும் அரண்மனைக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கே போன பிறகு இப்பொழுது சரீரத்திலுள்ளவர் முன்னிருந்த அரசனில்லையென்றும், இவர் அவனை விட வெகு உத்தமமானவரென்றும் உணர்ந்துகொண்ட அந்தப்புரத்திலுள்ளவர்கள், இந்த யோகி தன் வாஸ்தவமான சரீரத்தை எங்கேயாவது வைத்துவிட்டே வந்திருப்பாரென்றும் அதை அழித்துவிட்டால் அவர் இங்கேயே சாசுவதமாயிருந்து விடுவாரென்றும் தீர்மானித்து, எங்கேயானாலும் சரி, இறந்துபோனதுபோல் காணப்படும் சரீரங்கள் இருந்தால்

அவைகளை தஹித்து விடும்படி உத்தரவிட்டார்கள். அப்படியே ராஜபடர்கள் சென்று தேடியதில் ஸ்ரீ சங்கரருடைய சரீரத்தையே கண்டு பிடித்து அதைக்கொளுத்திவிட ஏற்பாடு செய்து விட்டார்கள். இதைக்கண்டு மிகவும் பீதியடைந்த சிஷ்யர்கள் நகரத்திற்குள் சென்று சிரமப்பட்டு ஸ்ரீ சங்கரரின் கவனத்திற்கு வந்தார்கள். உடனே அவர் அந்த சரீரத்தை விட்டு விட்டுத் தன் சரீரத்தில் பிரவேசித்துக் கொண்டார். அது அக்னியினால் பீடிக்கப்பட்டிருந்தபடியால் ஸ்ரீ லக்ஷ்மி நரஸிம்ஹரை ஸ்துதித்தார். உடனே மழை பெய்து தீயணைந்தது.

அதன் பிறகு அங்கிருந்து புறப்பட்டு அமருகன் சரீரத்தில் இருக்கும்போது ஏற்பட்ட அனுபவங்களைக் கொண்டு காமசாஸ்திரத்திலும் உபயபாரதீக்கு பதில் சொல்லுவதற்கு இவர் வருவதைக் கண்டவுடனேயே அவள் தோல்வியடைந்ததாக ஒப்புக்கொண்டு விட்டாள். தன் ஸ்வயமான வாக்தேவீ ஸ்வரூபத்துடன் ஸத்யலோகம் புறப்பட்டாள். அப்பொழுது ஸ்ரீ சங்கரர் அவளை மந்திரத்தினால் கட்டுப்படுத்தி தான் கோரும் ஸ்தலங்களிலெல்லாம் அவள் ஸாந்நித்யம் அடைந்து விளங்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். (இந்த பரகாயப் பிரவேச ஸம்பவத்தை நம்புவதற்கு சிலர் பின் வாங்குகிறார்கள். ஆனால் இவ்விஷயம் எல்லா சங்கர விஜயத்திலும் காணப்படுகிறது. சிலவற்றில் பின்னால் காச்மீரத்தில் ஸர்வக்ஞ பீடாரோஹண ஸமயத்தில் இது நடந்ததென்று சொல்லப்பட்டிருந்தபோதிலும் ஸம்பவம் நடந்தது என்பதில் அபிப்ராய பேதமில்லை). பிறகு கிரமப்படி விசுவரூபருக்கு ஸன்யாஸம் கொடுத்து ஸுரேசுவரர் என்ற யோகபட்டத்துடன் தன் சிஷ்யராக சங்கரர் சேர்த்துக் கொண்டார்.

## 5. சிஷ்யர்கள்

ஸுரேசுவரர் முதலான சிஷ்யர்களுடன் ஸ்ரீமத் ஆசார்யாள் தக்ஷிண திக்கு நோக்கி விஜயம் செய்து அநேக வாதிகளை ஜயித்து வைதிக

ஸித்தாந்தத்தை நிலை நாட்டினார். அவரை வாதத்தில் ஜயிக்க முடியாதென்று உணர்ந்த ஒரு காபாலிகன் அவரையே ஒழித்து விடுகிறதென்ற கெட்ட எண்ணத்துடன் அவரிடம் வந்து வெகு விநீதன் போல "நான் பரமசிவனை வெகு பக்தியுடன் ஆராதித்து வருபவன். அந்த ஆராதனைக் கிரமத்தில் பகவானுக்கு பலியாக ஒரு ஸார்வ பௌம அரசனுடைய சிரஸையாவது அல்லது ஸர்வ ஸங்கத் தியாகம் செய்த ஒரு மஹானுடைய சிரஸையாவது அர்ப்பணம் செய்யவேண்டியிருக்கிறது. அவ்வித அரசன் இக்காலத்தில் கிடையாது. என் அதிருஷ்டவசத்தினால் எல்லாவற்றையும் உதறித் தள்ளின மஹானாகிய தாங்கள் கிடைத்திருக்கிறீர்கள். தாங்கள் தங்கள் சிரஸைக்கொடுத்து என் விரதானுஷ்டானம் பூர்த்தியாகும்படி அனுக்ரஹிக்கவேண்டும்" என்று கேட்டுக் கொண்டான். இந்த விசித்ரமான வேண்டுகோளினால் கொஞ்சமும் உலையாத மனதுடன் ஸ்ரீ சங்கரர் "மாம்ஸமும் எலும்புகளும் நிறைந்த இந்த அசுத்தமான சரீரமும் உனக்கு உபயோகப்படக்கூடியதென்பதில் ஸந்தோஷம். ஆனால், என் தலையை எடுக்கும் ஸமயம் என் சிஷ்யர்களுக்குத் தெரியாமல் ஜாக்ரதையாகப் பார்த்துக்கொள்" என்றார். பிறகு சங்கரர் ஸமாதி நிஷ்டராக இருக்கும்போது இவர் தலையை வெட்டுவதற்காக அந்தக் காபாலிகன் கத்தியை ஓங்கும் ஸமயம், குருவினிடம் வைத்திருந்த விசேஷ பக்தியினால் தன் ஆசார்யருக்கு ஏதோ பெரிய ஆபத்து வந்திருப்பதாக பத்மபாதருக்குத் தோன்றி, அவர் ஸ்ரீ நரஸிம்ஹமூர்த்தியை தீவிரமாக த்யானம் செய்ததன் பேரில் அப்பகவானுடைய ரூபத்தையே அடைந்து, காபாலிகன் பேரில் பாய்ந்து, அவனை சுக்குச் சுக்காகக் கிழித்துவிட்டார். இந்த நரஸிம்ஹர் செய்த அட்டஹாஸத்தினால் ஸமாதி கலைந்து ஸ்ரீ சங்கரர் கண் விழித்துப் பார்க்கையில் நடந்த விஷயம் தெரிந்து மறுபடியும் பத்மபாதர் தன் ரூபத்தையே அடையவேண்டுமென்று பிரார்த்தித்தார். பத்மபாதருக்கு ஸ்ரீ நரஸிம்ஹரிடத்திலும் தன்னிடத்திலும் எவ்வளவு பக்தியேற்பட்டிருக்கிறதென்பதை உணர்ந்து மெச்சினார்.

இவ்விதமாக பத்மபாதரால் காப்பாற்றப்பட்ட பிறகு மேலும் தக்ஷிண தேச யாத்திரையைத் துடங்கி நடத்தினார். ஸ்ரீ மஹாபலேசுவர

க்ஷேத்ரமான கோகர்ணம் போய்விட்டு ஸ்ரீ மூகாம்பிகையை தர்சனம் செய்யப்போன ஸமயத்தில் இறந்துபோயிருந்த ஒரு பையனை ஜீவிக்கும்படி செய்து பெற்றோர்களை துக்கத்திலிருந்து விடுவித்து ஸந்தோஷிக்கச் செய்தார்.

ஸ்ரீவலி என்ற கிராமத்திலிருக்கும்போது, மூடனாகத் தோன்றின ஒரு பையனை அவன் பெற்றோர்கள் அழைத்துவந்து ஸ்ரீமத் ஆசார்யருடைய அனுக்ரஹத்தை வேண்டினார்கள். உடனே அந்தப் பையனுடைய மஹிமையை உணர்ந்த ஸ்ரீ சங்கரர் அவனைப் பார்த்து "நீ யார்?" என்று கேட்டார். அதற்கு உடனே எல்லாரும் ஆச்சர்யப்படும்படி பன்னிரண்டு சுலோகங்களில், ஜடமான மனோவாக்கு காயங்களை பிரவிருத்திக்கச் செய்துகொண்டும், ஜகத்தை பிரகாசப்படுத்திக் கொண்டும் இருக்கிற நித்ய ஞான ஸ்வரூபியான ஆத்மாவே நான் என்று வெகு அழகாகவும் தெளிவாகவும் சொன்னான். அவன் வெளியிட்ட விஷயமும் ரீதியும் உள்ளங்கைக் கனிபோல் மிகவும் தெளிவாயிருந்தபடியால் அவனுக்கு "ஹஸ்தாமலகர்" என்றே பெயரிட்டு, கிரமப்படி அவருக்கு ஸன்யாஸம் கொடுத்து, அவரைத் தன்னுடைய பிரிய சிஷ்யராகச் சேர்த்துக்கொண்டார். குருநாதர் இவரிடம் எவ்வளவு ப்ரீதியடைந்தாரென்பது, தானே அந்த சுலோகங்களுக்கு பாஷ்யம் எழுதி அனுக்ரஹித்ததிலிருந்து நன்கு விளங்குகிறது.

மறுபடியும் கிரமமாக தென்திசை நோக்கி யாத்திரை செய்துவருகையில், துங்கா நதிக்கரைக்கு வந்த ஸமயம் பிரஸவ வேதனையுடனிருந்த ஒரு தவளையை வெய்யில் தாக்காமலிருப்பதற்காக ஒரு ஸர்ப்பம் தன் படத்தை விரித்து நிழல் கொடுத்துக் கொண்டிருந்த அபூர்வ ஸம்பவத்தைக் கண்டு, ஸ்வபாவ ஸித்தமான சத்ருக்களும் தங்கள் துவேஷத்தை விட்டு மைத்ரியுடன் இருக்கக்கூடிய அதி பரிசுத்தமான சாந்தமான ஸ்தலம் இதுவே என்று தீர்மானித்து, தான் இங்கேயே தங்குவதான உத்தேசத்துடன் அங்கே ஒரு பாறையில் ஸ்ரீ சக்ரம் வரைந்து அதில் ஸரஸ்வதி தேவியை ஸ்ரீ சாரதா என்ற நாமத்துடன் பிரதிஷ்டை செய்து அழகாக ஒரு சிறு ஆலயமும் கட்டி வைத்தார். இவ்விடத்திலேயே த்யானத்திலும்,

அம்பிகையின் ஆராதனத்திலும் சிரத்தாளுக்களான சிஷ்யர்களுக்கு தத்வோபதேசம் செய்து கொண்டும், உபநிஷத்துக்களில் கண்ட அத்வைத மார்க்கத்தில் பயிற்சி கொடுத்துக் கொண்டிருப்பதிலுமாகப் பன்னிரண்டு வருஷ காலம் ஸ்ரீ சங்கரர் வாஸம் செய்ததாகச் சொல்லப்படுகிறது. இதுவே சிருங்கேரியென்று சொல்லப்படுகிற சிருங்ககிரி க்ஷேத்ரம்.

சிருங்கேரியில் இருந்துகொண்டு வழக்கம்போல் தன் பாஷ்யங்களை சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்து வரும் முறையில், ஒரு நாள் கிரியென்ற சிஷ்யர் வந்து சேராததினால் பிரவசனம் ஆரம்பிக்கக் கொஞ்சம் தாமதம் ஏற்பட்டது. அவர் குருநாதருக்கு பலவித சுசுரூஷை செய்வதிலேயே ஈடுபட்டவர். அன்றைய தினம் நதியில் ஸ்ரீமத் ஆசார்யாரின் வஸ்திரங்களைத் துவைத்துக் கொண்டிருந்தார். அவர் வித்வானல்ல, இந்த மாதிரி சுசுரூஷைக்குத்தான் தகுதியுள்ளவர் என்று நினைத்திருந்த பத்மபாதர் இந்தத் தாமதத்தைப் பொறுக்காதவராக "கிரிக்காக நாம் எதற்குக் காத்துக் கொண்டிருக்கவேண்டும்? அவருக்குப் பதில் இந்த சுவரே இருக்கிறதே?" என்று சொல்லிவிட்டார். யாரிடமும் இருக்கக்கூடாத உசிதமாகாத இந்த மனோபாவம் பத்மபாதரிடம் இருக்கக் கண்டு, ஸ்ரீமத் ஆசார்யார் அதை உடனே விலக்கக்கருதி, மானஸிகமாகவே கிரியை ஆசீர்வதித்தார். அந்த ஸமயம் கிரிக்குத் தன்னைத் தெரியாமலே ஒரு ஞானவொளி ஏற்பட்டதாய் உணர்ந்தார். உத்தமமான தத்வங்களெல்லாம் பளிச்சென்று தெரிந்தன. உடனே குருநாதரிடம் விரைவாகச் சென்று, தன்னுடைய பக்தியையும், கிருதக்ஞதையையும் தோடக விருத்தத்தில் அமைந்த எட்டு சுலோகங்களால் வெளியிட்டார். இதைக் கண்டு மற்றவர்கள் வியந்ததுடன் இவரிடம் விசேஷ கௌரவபுத்தி வைக்க ஆரம்பித்தார்கள். இது முதல் இவருக்கு "தோடகாசாரியார்" என்றே பிரஸித்தி ஏற்பட்டது. அதே விருத்தத்தில் அத்வைத ஸித்தாந்தத்தின் முக்ய அம்சங்களை வெகு தெளிவாக ஸங்கிரஹித்து "சுருதி ஸார ஸமுத்தரணம்" என்ற கிரந்தத்தையும் இயற்றியிருக்கிறார்.

# 6. சிஷ்யர்களின் கிருதிகள்

சிருங்கேரியில் ஸ்ரீ பகவத்பாதர் இருக்கும்போது, தான் எழுதிய பிரஹ்மஸூத்ர பாஷ்யத்தையனுஸரித்து, காரிகை எழுதும்படி ஸுரேசுவரரிடம் சொன்னார். ஆனால் மற்ற சிஷ்யர்கள் (முக்யமாக பத்மபாதர் முதலியோர்) ஸுரேசுவரர் வாதத்தில் தோல்வியடைந்து சபதத்தைக் காப்பாற்றவே ஸன்யாஸம் பெற்றதால் வாஸ்தவமாக அத்வைத அபிமானியில்லையென்றும், பாஷ்யக் கருத்துக்களையே விபரீதார்த்தம் செய்துவிடுவாரென்றும் பயந்து ஆக்ஷேபித்தார்கள். அவர் மனப்பூர்வமாகவே அத்வைதிதான் என்று ஸ்ரீமத் ஆசார்யார் சொல்லியும் இவர்கள் ஸந்தேஹம் நீங்கவில்லை. இவ்வளவு ஆக்ஷேபணை இருக்கும்போது அதை மீறி வற்புறுத்த இஷ்டமில்லாமல் ஸ்ரீ சங்கரர் "ஸுரேசுவரர் இல்லையானால் வேறு யார் எழுதுவார்?" என்று கேட்டார். பத்மபாதருக்குத் தன்னை எழுதும்படி சொல்லவில்லையே என்ற தாபத்தில், வித்யாப்யாஸமே செய்யாத ஹஸ்தாமலகரைச் சுட்டிக்காட்ட இதுவே ஸந்தர்ப்பம் என்று நினைத்து "ஆத்ம ஸாக்ஷாத்காரத்தில் மேல்போன ஹஸ்தாமலகர் இருக்கிறாரே, அவரையே காரிகை எழுதச் சொல்லலாம்" என்றார். அதற்கு அவர் எதிர்பாராத முறையில் ஸ்ரீமத் ஆசார்யாரிடமிருந்து "ஹஸ்தாமலகர் எழுதுவாரேயானால் வெகு உத்தமமாகத்தான் இருக்கும். ஆனால் அவரை ஆத்மநிஷ்டை நிலையிலிருந்து கிரந்த கர்த்தாவென்ற நிலைக்கு இறக்குவது மிகவும் சிரமம்" என்று பதில் வந்தது. அவர் தன்னையும் விட மேல்நிலையில் இருப்பதாக ஸூசிபித்தார்.

ஹஸ்தாமலகர் பால்யத்தில் வாசித்ததில்லையென்று மாத்திரம் அறிந்திருந்த பத்மபாதர் இந்த பதிலைக்கண்டு ஆச்சர்யப்பட்டு அவ்வளவு பெரிய நிலை அவருக்கு எப்படி ஏற்பட்டதென்று குருநாதரிடமிருந்து அறிய ஆவல்பட்டார். இவருடைய பெற்றோர்கள் தீர்த்தயாத்திரையாக தன் சிறு குழந்தையுடன் போய் கொண்டிருக்கையில் ஒரு நாள் யமுனா நதியில் ஸ்நானம் செய்ய நினைத்து அதன் கரையில் த்யானத்தில் அமர்ந்திருந்த ஒரு யோகி

இக்குழந்தையை கவனித்துக் கொள்ளுவார் என்று நம்பி, அவர் முன்பு குழந்தையை விட்டுவிட்டு அதன் தாயார் நதியில் இறங்கினாள். இவ்விதப் பொறுப்பு தனக்கு வந்திருக்கிறதென்பதையே அறியாத அந்த முனிவர் தியானத்திலேயே இருந்துவருகையில் குழந்தை கொஞ்சம் கொஞ்சமாக நகர்ந்து பிரவாஹத்தில் விழுந்து இறந்துவிட்டது. அதன் தாயார் கரைக்கு வந்து பார்க்கையில் குழந்தையைக் காணாமல் தேடிப் புலம்பும்போது ஜலத்தில் மூழ்கி இறந்துவிட்டதாக அறிந்தாள். உடனே அதன் தேஹத்தை யோகியின் முன்பு போட்டுக்கொண்டு மிகவும் அலறினாள். தனக்கு இந்த விபத்தினால் ஏற்பட்ட துக்கம் அந்த யோகியின்பேரில் கோபமாக மாறி என்ன செய்வதென்று தெரியாமல் தவித்தாள். இவள் செய்த சப்தத்தினால் பஹிர் முகமான அந்த யோகிக்கு இவளிடம் கருணையேற்பட்டு இவளுக்கு ஆறுதல் சொல்லுவதற்கு வேறு வழியில்லாததினால் தானே யோக சக்தியால் தன் சரீரத்தை விட்டு வெளிக்கிளம்பி அக்குழந்தையின் சரீரத்திற்குள் பிரவேசித்துக்கொண்டார். உடனே அக்குழந்தை மறுபடியும் பிழைத்து எழுந்ததாக நினைத்துக்கொண்ட பெற்றோர்கள் வெகு ஸந்தோஷமடைந்தார்கள். அக்குழந்தையே இந்த ஹஸ்தாமலகர் என்ற இந்த அற்புதமான வரலாற்றைக் கேட்ட மற்ற சிஷ்யர்கள் இனி அவருடைய மஹிமையைப்பற்றி ஸந்தேஹிப்பதற்கே இடமில்லாமல் போய்விட்டது.

ஸூத்திர பாஷ்யத்திற்கு காரிகை எழுதமுடியாமல் போனதினால் ஸுரேசுவரருக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கு மாற்றாக, அவருடைய சுக்ல யஜுர்வேதத்தில் உள்ள பிருஹதாரண்ய உபநிஷத்திற்கும், தன்னுடைய கிருஷ்ண யஜுர் வேதத்தில் அடங்கிய தைத்திரீய உபநிஷத்திற்கும், தான் இயற்றி இருக்கும் பாஷ்யங்களுக்குக் காரிகைகள் எழுதும்படிக்கும், அத்வைத ஸித்தாந்தத்தை துலக்கக் கூடியதாகத் தனித்து ஒரு கிரந்தம் எழுதும்படிக்கும், ஸ்ரீமத் ஆசார்யாரே ஸுரேசுவரருக்குக் கட்டளையிட்டார். கர்மாவிற்கு அதீதமானது ஆத்மா என்று எடுத்துக் காட்டிய அந்தத் தனி கிரந்தம் "நைஷ்கர்ம்யஸித்தி" எனப்படும். இவைகளைத் தவிர ஸ்ரீமதாசார்யார்

இயற்றிய தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்தின் பேரில் "மானஸோல்லாஸம்" என்ற காரிகையையும் "பஞ்சீகரணம்" என்ற பிரகரணத்தின் பேரில் ஒரு காரிகையும் எழுதினார். யாக்ஞவல்க்ய ஸ்மிருதியின் பேரில் "பாலக்ரீடை" என்ற வியாக்யானத்தையும் இவர் இயற்றியதாகச் சொல்லப்படுகிறது. பூர்வாசிரமத்தில் எழுதியிருக்கலாம்.

பிரஹ்மஸூத்ர பாஷ்யத்திற்கு காரிகை எழுதும்படி தன்னைச் சொல்லாததினால் வருத்தமடைந்திருந்த பத்மபாதரும், அப்பாஷ்யத்தின் பேரில் கத்ய ரூபமாக ஒரு டீகை எழுத ஆரம்பித்தார். இரண்டாவது அத்யாயம் முதல் பாதம் வரை அதாவது ஐந்து பாதங்களுக்கு வியாக்யானம் எழுதியாகியிருக்கும் போது, தென்தேசத்திலுள்ள க்ஷேத்ரங்களை தரிசித்துவர எண்ணம் கொண்டார். யாத்திரையில் ஏற்படக்கூடிய விக்ஷேபங்களினால் ஆத்மானுஸந்தானமான அவசியமான காரியத்திற்கு இடஞ்சலேற்படுமென்று குருநாதர் எடுத்துச் சொல்லியும் மனஸில் படாமலிருந்தபடியால், அவரிஷ்டப்படியே போய் வரும்படி அனுமதி கொடுத்தார். அப்படியே பத்மபாதர் புறப்பட்டு திருப்பதி, காளஹஸ்தி, காஞ்சீபுரம், ராமேசுவரம் முதலான ஸ்தலங்களுக்குச் சென்றார். வழியில் ஸ்ரீரங்கத்தில் இருக்கும்போது தன்னுடைய பூர்வாசிரம மாமனும் தீவ்ரகர்மடருமான ஒருவனிடம் தான் எழுதிய வியாக்யானத்தைக் காட்டினார். அவர், தான் நன்கு கவனித்துப் பார்க்க வேண்டியிருப்பதால் அது தன்னிடமே இருக்கட்டும், திரும்பிப் போகும் போது வாங்கிக் கொள்ளலாம் என்று சொல்லிக் கிரந்தத்தை வாங்கி வைத்துக்கொண்டார். தன்னுடைய ஸித்தாந்தங்களை எல்லாம் அது மிகவும் வலுவாகக் கண்டிப்பதினால் அக்கிரந்தமிருந்தாலே ஆபத்து என்று கருதி, பத்மபாதர் திரும்பி வருவதற்கு முன் அந்தக் கிரந்தத்துடன் சேர்த்துத் தன் வீட்டுக் கூரைக்கே தீ வைத்து விட்டார். பத்மபாதர் வந்ததும், வீடுபோனதை விட கிரந்தம் போய் விட்டதிலேயே தான் அதிக துக்கமடைவதாக அவர் பாசாங்கு செய்ததை வாஸ்தவமென்று நம்பி, பத்மபாதர் கிரந்தமெழுதிய புத்தி தனக்கு இருந்து வருவதால் மறுபடியும் எழுதி

விடலாமென்று மாமனுக்கு ஆறுதல் சொன்னார். இதைக்கேட்டு பயம் கொண்ட அவர் பத்மபாதருக்குக் கொடுக்கும் அன்னத்தில் ஏதோ மருந்து கொடுத்து விட்டதாகவும் அதனால் பின்னால் பத்மபாதர் எழுத ஆரம்பிக்கையில் முன்போல புத்தி வேலை செய்யவில்லையென்றும் சொல்லப்படுகிறது. இந்த நிலைமையில் மிக்க வருத்தத்துடன் குருநாதரிடமே போய் விடத் தீர்மானித்துத் திரும்பினார்.

## 7. தாயாரின் ஸத்கதி

பத்மபாதர் இவ்விதம் சிருங்கேரியை விட்டுப்போயிருக்கும் ஸமயம், ஸ்ரீ சங்கரரின் தாயாரின் அந்த்ய காலம் நெருங்கி விட்டதாகவும், தான் அவளை விட்டுப் பிரியும்போது கொடுத்த வாக்கையனுஸரித்துத் தன்னைப் பார்க்க வேண்டுமென்று அவள் மிகவும் ஆவலுடனிருப்பதாகவும் ஸ்ரீ சங்கரருக்குத் தெரிந்தது. உடனே காலடிக்குப் போய்ச் சேர்ந்து, அவளுடைய நிலைமையைப் பார்த்து அவளைக் கைலாஸத்திற்கு அழைத்துச் செல்லும்படி பரமசிவனை அவர் பிரார்த்தித்தவுடன் வந்து சேர்ந்த பார்ஷதர்களான பூதகணங்களைக் கண்டு அவள் பயந்து, ஸௌம்யமான உலகத்திற்கே தன்னை அனுப்பவேண்டுமென்று கேட்டுக்கொண்டாள். அப்படியே மஹாவிஷ்ணுவை பிரார்த்தனை செய்தவுடன் ஸர்வாலங்காரபூஷிதர்களாக விஷ்ணு தூதர்கள் வந்தார்கள். அவர்களுடன் போய்வர அவளும் திருப்தியுடன் ஸம்மதித்தாள். அப்படியே வைகுண்டம் போய்ச் சேர்ந்தாள்.

அவள் இவ்விதம் புறப்பட்ட பிறகு அவளுடைய சரீரத்திற்கு ஸம்ஸ்காரம் செய்ய யத்தனித்ததில் ஸன்யாஸி அவ்வித ஸம்ஸ்காரம் செய்வது சாஸ்திரீயமில்லையென்று பந்துக்கள் ஸஹாயம் செய்ய மறுத்து விட்டார்கள். அதன் பேரில், தானே சரீரத்தைத் துண்டுபடுத்தி வீட்டுப்பின் பக்கத்தில் கொண்டு போய்ச் சேர்த்து வைத்து, கையிலிருந்தே அக்னியை ஆவிர்பவிக்கும்படி செய்து,

சிதையில் தஹனக்கிரியையை நடத்தி விட்டார். அப்பொழுது இரண்டு பந்துக்கள் மாத்திரம் இவர் செய்வது சாஸ்திரமில்லையென்று நினைத்தபோதிலும், இவருடைய நிலையைக் கண்டு அனுதாபப்பட்டு சரீரத்தின் தலையையும் கால்களையும் பின்பக்கம் கொண்டு போக உதவினதாகச் சொல்லப்படுகிறது. அப்பொழுது தனக்கு ஏற்பட்ட மனோவருத்தத்தில் தனக்கு உதவி செய்ய மறுத்த இனத்தாருக்கு சாபமிட்டார். அச்சாபத்திற்கு உள்படாதவர்களாக இவ்விரண்டு பந்துக்களுமிருந்து வந்ததினால் இப்பொழுது அக்குடும்பத்தாருக்கு "தலைப்புள்ளி", "கால்புள்ளி" என்ற அடைமொழி இருந்து வருகிறது. தாயாரை ஸம்ஸ்காரம் செய்தவிடம் அது முதல் அதிபரிசுத்தமாக பாவிக்கப்பட்டு அவ்விடத்திலிருந்து ஒரு துளிமண் எடுத்து உபயோகித்தால் அநேக வியாதிகள் நிவிருத்தியாவதாக பிரஸித்தியிருந்து வருகிறது.

இத்தனை நூற்றாண்டுகளாக பரிபாலிக்கப்பட்டு வரும் இந்த ஸம்ஸ்காரஸ்தலம், ஸமீபத்திலுள்ள ஸ்ரீ கிருஷ்ணன் கோவில், முன் சொல்லப்பட்ட மற்ற அடையாளங்கள், இவைகள் தான் ஸ்ரீ பகவத்பாதரின் ஜன்ம பூமியை ஸந்தேஹமன்னியில் தீர்மானிக்க உதவின. அவ்விடத்திலேயே ஸ்ரீமத் ஆசார்யாருக்கும் ஸ்ரீ சாரதாம்பாளுக்கும் ஆலயங்கள் கட்டி 1910-ல் கும்பாபிஷேகம் செய்துவைக்கும்படி மஹானான ஸ்ரீ ஜகத்குரு ஸச்சிதானந்த சிவ அபிநவ நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகளவர்களுக்கு ஸாத்யமாக ஏற்பட்டது.

## 8. விஜய யாத்திரை

பத்மபாதர் தென் தேச யாத்திரையிலிருந்து திரும்புகையில், குருநாதர் சிருங்கேரியில் இல்லையென்றும் கேரளத்திலிருப்பதாகவும் கேள்விப்பட்டு அவரைத்தேடிக் கொண்டு கேரள தேசத்திலேயே ஸந்தித்துக் கொண்டார். தான் எழுதி இருந்த வியாக்யானத்திற்கு ஏற்பட்ட விபத்தை வெகு வருத்தத்துடன் விக்ஞாபனம் செய்து,

மறுபடியும் எழுதிவிட தனக்கு சக்தி குன்றியிருப்பதையும் தெரிவித்தார். பத்மபாதர் புறப்பட்டுப் போவதற்கு முன் தன்னிடம் வாசித்துக் காட்டிய பாகத்தைத் தானே திருப்பிச் சொல்லுவதாகச் சொல்லி ஒருவாறு குருநாதர் ஸமாதானப்படுத்தினார். இவ்விதமாகத் தான் எழுதின கிரந்தத்தைத் தானே மறுபடியும் எழுத முடியாமல் குருநாதர் சொல்லி எழுதும்படியேற்பட்டது. அவ்விதம் எழுதிக் கொண்டது, முதல் பாதத்தில் முதல் நான்கு ஸூத்ரங்களின் பாஷ்ய வியாக்யானம்தான் ஆகும். இதிலிருந்தே பத்மபாதருடைய வைதுஷ்யமும் அபிப்ராயமும் நன்கு அறிந்து கொள்ளக்கூடியவை. இதுவே வெகு கம்பீரமான கிரந்தமானதினால் அதன் பேரில் வியாக்யானமும், அவ்வியாக்யானத்தின் பேரில் ஸ்ரீவித்யாரண்யாராலேயே வியாக்யானமும் ஏற்பட்டிருக்கின்றன. இதர பாஷ்யங்களின் பேரில் வியாக்யானம் எழுதாமல் குருநாதருடைய மந்த்ர சாஸ்திர கிரந்தமான "பிரபஞ்சஸாரம்" என்பதற்கும் வியாக்யானம் எழுதியிருக்கிறார். அவர் உள்பட எல்லா சிஷ்யர்களுடன் ஆசார்யார் கன்யாகுமரி வரையிலுள்ள க்ஷேத்ரங்களுக்கெல்லாம் போய்விட்டு வடக்கே திரும்பி மதுரை, ராமேசுவரம், ஜம்புகேசுவரம், ஸ்ரீரங்கம், காஞ்சீபுரம், திருப்பதி, காளஹஸ்தி, ஸ்ரீசைலம், கோகர்ணம், துவாரகை முதலான க்ஷேத்ரங்களுக்கு விஜயம் செய்தார். அங்கு அங்கு வேதபிராமாண்யத்தை ஒப்புக்கொள்ளாதவர்களிடமும் ஒப்புக்கொண்டும்கூட துரர்த்தம் செய்கிறவர்களிடமும் வாக்குவாதம் செய்து வைதிக தர்மத்தை நிலைநாட்டினார். அனேக ஆலயங்களிலுள்ள தேவதைகளின் உக்ரமான கலையை இறக்கிவிட்டார். வைதிகமான பூஜாவிதானங்களையே நிலை நிறுத்தினார். மதமென்று பெயர் வைத்துக்கொண்டு நடமாடும் அனேக துராசாரங்களிலிருந்து நாட்டை விடுவித்தார். வேதத்தின் வாஸ்தவமான தாத்பர்யத்தை விளக்கி வைதிகக் கொள்கைகளையும், அனுஷ்டானங்களையும் பரிசுத்தமான ரீதியில் பரவும்படிச் செய்தார்.

இப்புண்ணிய பூமியிலுள்ள பல மூர்த்திகளைக் குறித்து அவர் பாடிய ஸ்தோத்ரங்களும், அத்யாத்ம வெளிச்சத்தைத் தேடும்

ஆஸ்திகர்களுக்கு அவர் செய்திருக்கும் உபதேசங்களும் ஏராளமாயிருக்கின்றன. உதாஹரணமாக, சிவாநந்தலஹரியும் ஸௌந்தர்யலஹரியும் பக்திரஸம் ததும்புவதுடன் ஸாஹித்ய முறையிலும் வெகு அழகாக ஜ்வலிக்கும் காவ்ய ரத்னங்களாகும். உத்தமாதிகாரிகளை உத்தேசித்து முன் சொன்ன பிரஹ்மஸூத்ர பாஷ்யத்தைத் தவிர முக்யமான பத்து உபநிஷத்துகளின் பேரிலும் ஸ்ரீமத் பகவத்கீதையின் பேரிலும் பாஷ்யங்கள் இயற்றி இருக்கிறார். அப்படியே விஷ்ணு ஸஹஸ்ரநாமம், ஸநத்ஸுஜாதீயம், லலிதாத்ரிசதீ ஸ்தோத்ரம், ஆபஸ்தம்ப அத்யாத்ம படலம் இவைகளுக்கும் பாஷ்யங்கள் இயற்றியிருக்கிறார். வேதாந்த விசாரத்தில் அதிகாரமுள்ளவர்களை உத்தேசித்து விவேகசூடாமணி, உபதேச ஸாஹஸ்ரீ முதலான கிரந்தங்களும், ஸாமான்ய அதிகாரிகளை உத்தேசித்து ஆயிரம் சுலோகங்கள் முதல் ஒரு சுலோகம் வரை அடங்கிய பலவிதமான பிரகரணங்களும், அவரால் அனுக்ரஹிக்கப்பட்டிருக்கின்றன. அவருடைய அத்புத சக்தியினால் யாருக்கும் ஊக்கம் வரும்படி அவர் ஜன ஸமூஹத்திற்கும், பின்னால் வரும் தலைமுறைகளுக்கும் செய்திருக்கும் பேருபகாரத்தை மதிப்பிட முடியாது. இன்னம் வடக்கே போகும்போது ஹிமயமலையில் தன் பரமகுருவான கௌடபாதாசார்யாரை ஸந்தித்து அவருடைய மாண்டூக்ய உபநிஷத் காரிகைகளுக்கு தான் எழுதிய பாஷ்யத்திற்கு ஸம்மதி பெற்று ஆசீர்வதிக்கப்பட்டதாகவும் சொல்லப்படுகிறது. அந்தப் பக்கத்தில் இருக்கும்போது வாதத்தில் ஜயிக்கப்பட்ட அபிநவகுப்தன் என்பவரால் ஆபிசாரம் செய்யப்பட்டு ஸ்ரீ சங்கரருக்கு பகந்தரரோகம் ஏற்பட்டதாகவும், அதை ஸ்வஸ்தம் செய்ய சிறந்த வைத்யர்களாலும் முடியாமலிருந்த ஸமயத்தில் பத்மபாதரே காரணம் தெரிந்து பிரதிப்ரயோகம் செய்து அபிநவகுப்தனையே பாதிக்கும்படி செய்து குருநாதரின் சிரமத்தை நிவிருத்தி செய்ததாகவும் சொல்லப்படுகிறது.

# 9. ஸர்வக்ஞ பீடாரோஹணம்

வட தேசத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் இவ்விதமாக ஸஞ்சரித்து வருகையில், காச்மீரத்தில் ஸ்ரீ சாரதாதேவியின் ஸந்நிதியிலுள்ள ஸர்வக்ஞபீடத்தை ஏறும்படியான யோக்யதை பெற்றவராக தக்ஷிண தேசத்திலிருந்து யாரும் வராததினால் தென்வாசல் மூடப்பட்டிருக்கிறதென்ற அபவாதம் ஸ்ரீ சங்கரர் காதில் விழுந்தது. எல்லா வித்யாஸ்தானங்களிலும் வரக்கூடிய வாதிகளை வென்று அந்த அபவாதத்தை நிவிருத்தி செய்துவிடவேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டு ஸ்ரீ சங்கரர் அங்கு போய்ச் சேர்ந்தார். இவரைத் தடுக்க வந்த ஸகல வித்வான்களையும் வாதத்தில் ஜயித்து, அம்பிகையிடத்திலும் ஸர்வக்ஞ பீடத்தில் ஏறுவதற்குத் தகுதியுள்ளவன்தான் தான் என்று காட்டிக்கொண்டு, பீடத்தில் ஏறி ஸர்வக்ஞர் என்று ஒப்புக்கொள்ளப்பட்டார்.

மானிடஜன்மம் எடுத்த உத்தேசம் பூர்த்தியாகிவிட்டதென்று கருதி, தான் இத்தனை காலமாகச் செய்து வந்த பிரசாரத்தின் பலனை சாசுவதமாக தேசத்தில் நிறுத்த உத்தேசித்து, தன் பிரதான சிஷ்யர்களான ஸுரேசுவரர், பத்மபாதர், தோடகர், ஹஸ்தாமலகர் ஆகிய நால்வரையும் நம் தேசத்தின் நான்கு திக்குகளிலுமாக, அதாவது, தென் திசைக்கு யஜுர்வேத பிரதானமாய் சிருங்கேரியிலும், மேற்கு திசைக்கு ஸாமவேத பிரதானமாய் துவாரகையிலும், வடதிசைக்கு அதர்வவேத பிரதானமாய் பத்ரியிலும், கீழ்திசைக்கு ரிக்வேத பிரதானமாய் புரீ ஜகன்னாதத்திலும், நான்கு ஆம்நாய பீடங்களை ஸ்தாபித்து, அவைகளில் பீடாதிபத்யம் வஹித்துக்கொண்டு, உபநிஷத் பிரதிபாத்யமான அத்வைத தத்வத்தை போதித்துக்கொண்டு பரம்பரையாக இருந்துவரும்படி நியமனம் செய்தார். தான் ஆராதித்து வந்த சந்திரமௌளீஸ்வர ஸ்படிகலிங்கத்தையும் ரத்னகர்ப்ப கணபதியையும், தான் பன்னிரண்டு வருஷகாலம் வஸித்துவந்த சிருங்கேரியில் நியமிக்கப்பட்ட ஸுரேசுவரரிடம் கொடுத்தார். பிறகு எல்லா சிஷ்யர்களையும் ஆசீர்வதித்துவிட்டு ஹிமாசல பிராந்தியத்தில்

சென்று கேதாரத்திற்கு ஸமீபத்தில் மறைந்துவிட்டார். அவர் கடைசியாகத் தென்பட்ட ஸ்தலம் அது முதல் வெகு பரிசுத்தமான க்ஷேத்ரமாக பாவிக்கப்பட்டு வந்திருக்கிறது. அவர் மறைந்ததாக இதுவரை பரிபாலிக்கப்பட்டு வந்த அந்த ஸ்தலத்தில் ஸமீபத்தில் ஸ்ரீ சங்கர பகவத்பாத மூர்த்தியை ஸ்ரீ துவாரகா பீடாதிபதியவர்கள் பிரதிஷ்டை செய்திருக்கிறாரென்பது குறிப்பிடத்தக்கது.

இவ்விதமாக நம் தேசத்திற்கும், உலகத்திற்குமே பேருபகாரம் செய்து ஈசுவராவதாரமாக விளங்கிய மஹானின் இச்சரித்திரச் சுருக்கத்தை வாசிப்போர்களுக்கு அவரிடம் விசேஷ பக்தியேற்பட்டு அவரைப் பற்றி இன்னமும் விஸ்தாரமாகத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆவல் ஏற்படுவதுடன், அவருடைய உபதேசங்களை நன்கு அறிந்து அவைகளின்படி தன்னால் இயன்ற மட்டில் தன் வாழ்க்கையில் நடந்து வந்து சிரேயஸ்ஸையடைய வேண்டுமென்பதே நம் உத்தேசம். அவ்விதம் நடந்து வந்தால்தான் நாம் வாஸ்தவத்தில் அவரிடம் நன்றியுள்ளவர்களாக இருக்கிறோமென்று ஆகும். நாம் மனப்பூர்வமாய் அவர் காட்டிய வழியில் நடக்க ஆரம்பித்துவிட்டால், ஸ்ரீ சங்கரருடைய ஸஹாயமும் அனுக்ரஹமும் ஏற்பட்டு நம் பிரயத்னங்கள் ஸபலமாகுமென்பதை திருடமாக நம்பலாம்.



## இரண்டாம் பாகம்

# ஸ்ரீ ஸுரேசுவராசார்யார்

## 1. கார்ஹஸ்த்ய சிறப்பு

அத்வைதாசார்யர்களில் ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யருக்கு அடுத்தபடியாக மிக பிரஸித்தராக இருப்பவர் ஸ்ரீ ஸுரேசுவராசார்யர்களே. அவர் காஷ்மீர் ராஜ ஸபையில் ஆஸ்தான பண்டிதராக இருந்த ஹிமமித்ரர் என்பவருடைய புத்ரர். ஹிமமித்ரர் ஸகல வித்யாபாரங்கதராக இருந்ததுடன் வெகு செல்வந்தராகவும் இருந்து வந்தார். மாதவீய சங்கர விஜயத்தில் அவருடைய இருப்பிடத்தை ராஜ கிருஹமென்றே வர்ணித்திருக்கிறபடியால் அரண்மனையிலேயே இருந்து வந்தார் என்று கூட நினைக்க இடமிருக்கிறது. அவர் புத்ரர் விசுவரூபர் என்பவர் குலத்திற்குத் தக்கபடி வித்யாப்யாஸம் செய்து வந்தார். அக்காலத்தில் நம் தேசத்தில் பிரசாரத்திலிருந்த புத்த மதத்தை எதிர்த்து விரட்டியவர்களின் முன்னணியில் நின்ற வைதிக சிகாமணியான ஸ்ரீ குமாரில பட்டரிடம் சிஷ்யராக இருந்து பூர்வ மீமாம்ஸையிலும், வைதிக கர்மானுஷ்டானங்களிலும் மிகவும் பற்றுதலுள்ளவராக ஆனார். மிக்க சிரத்தையுடன் விதிவத்தாகத் தன்னுடைய நித்யகர்மாக்களை அனுஷ்டித்து வந்து ஸகலவித சாஸ்திரங்களையும் கற்று மிகவும் தேர்ச்சி அடைந்தார். தக்க வயஸ் வந்த ஸமயம் சோணா நதிக்கரையில் வஸித்து வந்த விஷ்ணு மித்ரர் என்ற வித்வானின்

புத்ரியாக ஸரஸ்வதியின் அம்சமாக அவதரித்திருந்த உபயபாரதி என்பவளை விவாஹம் செய்து கொண்டார். இவரும் பிரஹ்மாவின் அம்சமென்று பிரஸித்திக்குத் தக்கபடி தாம்பத்யம் உத்தமமான ரீதியில் நடந்து வந்தது. இவருடைய வைதுஷ்யத்தினாலும், தினசர்யையினாலும், இவரிடத்தில் ஜனங்கள் விசேஷமான கௌரவபுத்தி வைத்திருந்தபடியால் அவர் பெயரைச் சொல்லுவதற்கே ஸங்கோசப்பட்டு வித்வான்களுக்குள் அலங்காரமாக இருந்தவர் என்கிற அர்த்தத்தைக் கொடுக்கக்கூடிய மண்டன மிஸ்ரர் என்ற அடைமொழியினாலேயே வியவஹரித்து வந்தார்கள்.

சில நாட்கள் சென்ற பிறகு அவர் விஸ்தாரமான மகத ராஜ்யத்தின் தென்மேற்கு மூலையில் நர்மதா நதியின் வடகரையில் உள்ள மாஹிஷ்மதீ என்ற நகரத்தில் ஸ்திரமாக வாஸம் செய்து வந்தார். அவருடைய கிருஹம் இந்திரனுடைய கிருஹம் போல் இருந்ததாகவும், அதன் மேல் உப்பரிகைகளினால் ஆகாசமே மறைக்கப்பட்டது போலவும் வர்ணிக்கப்பட்டிருப்பதால் அவருடைய லௌகிக ஸம்பத்து நன்கு வெளியாகிறது. அவர் கிருஹத்தில் உள்ள கூண்டுகளிலிருந்த கிளிகள், அவர் சிஷ்யர்களுக்குச் சொல்லும் பாடங்களைக் கேட்டுக்கேட்டு இவைகளும் தங்களுக்குள் வேதம், ஸ்வத: பிரமாணமா, பரத: பிரமாணமா, கர்மா தானாகவே பலனைக் கொடுக்குமா, பலனைக் கொடுக்க ஈசுவரன் வேண்டுமா, ஜகத் ஸத்யமா, மித்யையா என்றெல்லாம் பேசிக்கொள்ளும் என்று வர்ணிக்கப்பட்டிருக்கிறபடியால் அவருடைய வித்யையின் மஹிமை வெளியாகிறது.

## 2. ஸ்ரீ சங்கரர் ஸமாகமம்

ஸ்ரீ குமாரில பட்டர் ஸ்ரீ சங்கர பகவத்பாதரை விசுவரூபரிடம் போகச் சொல்லும்போது அவர் தன்னுடைய சிஷ்யர்களுக்குள் மிகவும் பிரியமானவர் என்றும், ஸகல வித்யைகளிலும் தனக்குமேல்

போனவரென்றும், அவரை ஜயித்தால் உலகத்தையே ஜயித்ததாக ஆகுமென்றும் சொல்லுகிறார். ஒரு குரு ஒரு சிஷ்யரைப் பற்றி இவ்விதம் சொல்ல வேண்டுமேயானால் அந்த சிஷ்யரின் மஹிமை அபாரமாகவே இருந்திருக்கும் என்பதில் ஸந்தேஹமில்லை. தவிரவும், ஸாதாரணமாக சிஷ்யர்களே குருவைத்தேடி அடைந்து தங்களுடைய பக்தியினாலும் ஸேவையினாலும் அவருடைய பிரஸாதத்தை அடைவது வழக்கம். இந்த விசுவரூபர் விஷயத்திலோ என்றால் குமாரில பட்டர் சொல்படி ஸ்ரீ சங்கர பகவத்பாதரே சிஷ்யனைத் தேடிக் கொண்டு புறப்பட்டு கங்கா தீரத்திலுள்ள பிரயாகையிலிருந்து நர்மதா தீரம் மாஹிஷ்மதி வரையில் போயிருக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

விசுவரூபர் வெகு தீவிரமான வைதிக கர்மானுஷ்டானபரர். வைதிக கர்மாக்களை சரியானபடி செய்வதிலுள்ள சிரமத்தையும், அஸௌகர்யத்தையும் நீக்கிக் கொள்ளுவதற்காகவே சிலர் ஸன்யாஸிகளாக ஆகிறார்கள் என்ற எண்ணமுடையவர். ஆகையால் அவர் ஸ்ரீ சங்கரரைப் பார்த்த உடன் கோபம் அடைந்த போதிலும் அவர் தன்னுடன் வாதத்திற்கே வந்திருக்கிறார் என்று தெரிந்ததின் பேரில் ஸுமுகமானார். தனக்கு ஸமானமாக ஒரு வித்வான் வந்து வாதம் செய்ய வேண்டுமென்று வெகு நாளாக ஆசைப்பட்டுக் கொண்டிருந்தும் இதுவரை அவ்விதம் ஒருவரும் அகப்படாததினால் இவர் வந்ததில் ஸந்தோஷமடைந்து, ஆனால் ஜயம் தனக்கேதான் என்ற நிச்சய புத்தியுடன் வாதத்திற்கு ஸம்மதித்தார். இருவரும் ஸம்மதித்து மண்டன மிஸ்ரரின் பார்யை உபயபாரதியை மத்யஸ்தையாக தீர்மானித்து மறுநாள் காலை முதல் வாதம் ஆரம்பித்தது. அவளுக்கு கிருஹ கிருத்யத்தைக் கவனித்துக் கொண்டு இவர்களுக்கு போஜனமும் தயாரிக்க வேண்டிய பொறுப்பு இருந்தபடியால் இவர்களிடம் ஒவ்வொரு புஷ்ப மாலை கொடுத்து, எவர் மாலை முதலில் வாடுகிறதோ அவரே தோல்வி அடைந்தவர் என்று தெரிந்து கொள்ளும்படி சொல்லிவிட்டு உள்ளே போய்விட்டாள். பிரதி தினம் ஆஹ்நிகங்களுக்கும் போஜனத்திற்கும், விசிராந்திக்கும் போக மற்ற வேளைகளிலெல்லாம் வாதம் ஐந்தாறு நாட்கள் வரை நடந்தது. அந்த வாதத்தின் விவரத்தையாவது,

பின்னால் ஸ்ரீ சங்கரருடைய வாதத்திற்கு பதில் சொல்ல முடியாமலும் தன்னுடைய ஸித்தாந்தத்தை ஸ்தாபிக்க முடியாமலும் போனதுடன் நிற்காமல் ஸ்ரீ சங்கரர் சொல்லுவதே ஸத்யமென்று மனப் பூர்வமாய் விசுவரூபர் ஒப்புக் கொண்டதையும் இங்கு எடுத்துச் சொல்ல உத்தேசமில்லை. பிறகு கிரமப்படி ஸந்நியாஸம் கொடுத்து உபநிஷத் தத்வார்த்தத்தை உபதேசம் செய்து ஸுரேசுவரர் என்ற யோக பட்டத்தையும் ஸ்ரீ சங்கரர் அளித்தார்.

நம் தேசத்தில் உள்ள மற்ற வித்வான்களைப் போலவே இவரும் தன் சரித்திரத்தை நன்கு அறிந்து கொள்ளும்படி எவ்வித விவரங்களையும் குறிப்பிடவில்லை. சங்கர விஜயங்களில் இவருக்கு ஸந்தானமிருந்ததாகக் காணவில்லை. இவர் ஸந்யாஸத்திற்கு ஸித்தமானவுடன் பர்த்தாவை விட்டு இருக்க இஷ்டமில்லாமல் அவர் பார்யை தன் ஸ்வயரூபமான தேவதாம்சத்தை எடுத்துக் கொண்டு அந்தர்த்தானம் செய்ய ஆரம்பிக்கையில் ஸ்ரீ சங்கரர், தான் கோரும் இடத்தில் அவள் ஸாந்நித்யம் அடையவேண்டுமென்று கேட்டுக்கொண்டதற்கு ஸம்மதித்து விட்டு அந்தர்த்தானமடைந்தாள் என்று மட்டில் சொல்லப்பட்டிருக்கிறது. அதன் பிறகு விசுவரூபர் ஒரு யாகம் செய்து தன்னுடைய எல்லா சொத்துக்களையும் தானம் செய்து விட்டே ஸன்யாஸியாக ஆனார். ஸ்ரீ சங்கரருடைய அபேக்ஷையின்படி ஸ்ரீ ஸரஸ்வதிதேவி துங்கைக் கரையில் சிருங்கேரியில் ஸ்ரீ சாரதா என்ற நாமத்துடன் ஸாந்நித்யமடைந்து இன்றைக்கும் அனுக்ரஹம் செய்து வருகிறாள்.

## 3. அவர் கிருதிகள்

ஸ்ரீ குமாரில பட்டர் ஸ்ரீ சங்கரரை ஸந்தித்த போது தனக்கே அவருடைய பாஷ்யத்தின் பேரில் வியாக்யானம் செய்யவேண்டுமென்ற ஆஸ்தை இருந்தபோதிலும் அப்பொழுது துஷாக்நிப்ரவேசம் செய்து விட்டபடியால் ஸாத்யமில்லையென்றும், விசுவரூபரைக் கண்டு அவரைக் கொண்டு எழுதச்சொல்லும்படி

சொல்லி இருந்தார். விசுவரூபர் ஸ்ரீ சங்கரருக்கு சிஷ்யராக ஆன பிற்பாடு வித்யையினாலும், அத்யாத்ம உன்னதியினாலும் திருப்தி அடைந்த ஸ்ரீ சங்கரர் ஸ்ரீ குமாரிலர் சொன்னபடியே தன் பிரஹ்மஸூத்ர பாஷ்யத்திற்கு வார்த்திகம் எழுதும்படியாக அவருக்கு அனுமதி கொடுத்தார். ஆனால் அவர் தீவ்ரமான கர்மடராக இருந்து வாதத்தில் தோற்றுப்போனவர் என்பதை மற்ற சிஷ்யர்கள் மறக்க முடியாமல் அவர் வ்யாக்யானம் எழுதும் முறையில் குருநாதரின் உபதேசங்களை மாற்றிவிடக்கூடும் என்று பயந்தார்கள். ஸ்ரீ சங்கரருக்கு இவ்விதமான ஸந்தேஹம் இல்லாமலிருந்த போதிலும், இந்த ஆக்ஷேபணையைக் கருதி ஸுரேசுவரர்தான் எழுதவேண்டுமென்று வற்புறுத்தவில்லை. இவர்களின் ஆக்ஷேபணையை ஸுரேசுவரரிடம் தெரிவித்து அத்வைதத்திலுள்ள முக்ய அம்சங்களை எடுத்துக்காட்டி ஸ்வதந்திரமாக ஒரு கிரந்தம் எழுதும்படி சொன்னார். அப்படியே ஸுரேசுவரர் நைஷ்கர்ம்யஸித்தி என்ற கிரந்தத்தை எழுதி குருநாதரிடம் ஸமர்ப்பணம் செய்தார். அவரும் மிகவும் ஸந்தோஷித்துத் தன்னுடைய வேதமான கிருஷ்ணயஜுர் வேதத்தில் உள்ள தைத்திரீய உபநிஷத்தின் பேரிலும், ஸுரேசுவரரின் வேதமான சுக்லயஜுர் வேதத்தைச் சேர்ந்த பிருஹதாராண்யக உபநிஷத்தின் பேரிலும் தான் செய்திருக்கும் பாஷ்யங்களுக்கு வார்த்திகங்கள் எழுதும்படி அனுமதி கொடுத்தார். இவைகளைத் தவிர ஸ்ரீ சங்கரர் செய்திருக்கும் தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்தின் பேரிலும் பஞ்சீகரணம் என்ற பிரகரணத்தின் பேரிலும் வார்த்திகங்கள் எழுதி இருக்கிறார். தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திர வார்த்திகம் மானஸோல்லாஸம் என்ற பெயருடன் மிகவும் பிரஸித்தமாயிருந்து அதன் பேரில் வ்யாக்யானங்களும் ஏற்பட்டிருக்கின்றன. அவர் எழுதிய வார்த்திகங்கள் எல்லாமே மிகவும் பிரமாணமான கிரந்தங்கள். அதற்குப் பின் வந்த கிரந்த கர்த்தாக்கள் சொல்லும் விஷயங்களும் யுக்திகளும் அவ்வார்த்திகங்களில், முக்கியமாக மிகப் பெரிதான பிருஹதாராண்யக வார்த்திகத்தில், கண்டவைகளைத் தவிர வேறு கிடையாதென்று தைர்யமாய் சொல்லலாம். யாக்ஞவல்க்ய ஸ்மிருதிக்கு பாலக்ரீடை என்ற ஒரு வியாக்யானம் எழுதி இருப்பதாகவும் சொல்கிறார்கள். ஸூக்ஷ்மமான

விஷயங்களைத் தெளிவாகவும் விஸ்தாரமாகவும் எழுதுவதில் அவருக்கு ஸமானம் யாரும் கிடையாது என்று சொல்லலாம்.

ஸ்ரீ சங்கரர் இவ்வுலகத்தில் 32 வருஷங்கள் வரை இருந்தார் என்பதும் 16வது வயது பூர்த்தியானதும் விசுவரூபரை ஸந்தித்தார் என்பதும் யாரும் அறிந்த விஷயம். பாக்கி 16 வருஷங்களில் 12 வருஷங்கள் சிருங்கேரியில் இருந்ததாகச் சொல்லப்படுகிறது. அங்கே மடம் ஸ்தாபிக்கும்போது தன்னுடைய சிஷ்யர்களில் மிகவும் வித்வானாகவும் வயதானவராகவும் இருந்த ஸுரேசுவரரை நியமித்தார் என்பதே நியாயமாகும். தவிரவும் நம் தேசத்தின் நான்கு திக்குகளிலும் நான்கு வேதங்களை அனுஸரித்து அவைகளிலுள்ள மஹாவாக்கியங்களை பிரதானமாக வைத்து நான்கு மடங்களை ஸ்ரீ சங்கரர் ஸ்தாபித்தபோது சிருங்கேரிக்கு யஜுர்வேதமும் அதிலுள்ள மஹாவாக்யமும் என்று ஏற்படுத்தும்போது யஜுர்வேதத்தைச் சேர்ந்த ஸுரேசுவரரை அங்கு நியமித்தார் என்பதுதான் உசிதமாகும்.

## 4. அவர் காலம்

ஸ்ரீ ஸுரேசுவரர் ஸ்ரீ சங்கரரை விட வயதில் பெரியவர் என்றும் அவர் ஸ்ரீ சங்கரருக்குப் பிற்பாடு இருந்துவந்தார் என்பதும் யாரும் ஒப்புக்கொண்ட விஷயம். அவர் எப்பொழுது பிறந்தார், எப்பொழுது ஸித்தியானார் என்பது துல்யமாகத் தெரியவில்லை. மைசூர் கெஸடியர் வால்யூம் 1 பக்கம் 307ல் ஸ்ரீ மடத்திலிருந்து குரு பரம்பரையைத் தெரிந்து வந்ததாகச் சொல்லுமிடத்தில் ஸ்ரீ சங்கரர் (பிறந்தது 737 A-D), ஸன்யாஸம் 745, ஸித்தி 769, ஸுரேசுவரர் ஸந்யாஸம் 753, ஸித்தி 773, நித்ய போதகனாசார்யார் ஸந்யாஸம் 758, ஸித்தி 848 என்று கண்டிருக்கிறது. இப்பொழுது நவீன விமர்சகர் ஒருவர் ஸ்ரீ சங்கரர் (பிறந்தது 788 A-D), ஸந்யாஸம் 796, ஸித்தி 820; ஸுரேசுவரர் ஸந்யாஸம் 813, ஸித்தி 834; நித்ய போதகனாசார்யார் ஸந்யாஸம் 818, ஸித்தி 848, என்கிறார்.

பின்கண்ட இரண்டு ஆசார்யர்களுக்கும் கொடுத்திருக்கும் வருஷங்கள் பிரபவாதி வருஷப் பெயர்களை பாதிக்காமல் போனாலும் சாலிவாஹன சக வருஷங்களை மாற்றிவிடுகின்றன. ஸ்ரீ சங்கரர் விஷயத்தில் சக வருஷம், வருஷப் பெயர் இரண்டையும் மாற்றி இருக்கிறது. இதற்கு அவசியம் தெரியவில்லை. ஸ்ரீ சங்கரருடைய அவதாரம் விக்ரம 14 என்று கண்டிருப்பதை உஜ்ஜயினி விக்ரமாதித்யனுக்கு ஸம்பந்தப்படுத்தி கிருஸ்துவுக்கு முந்தின நூற்றாண்டில் ஸ்ரீ சங்கரரின் அவதாரமென்றும் சொல்வது ஸுரேசுவரர் ஸித்தி வருஷத்திற்கு ஒத்துப்போகும்படி அவருக்கு 800 வருஷம் பீடாதிபத்தியம் கொடுப்பதும் நியாயமில்லையென்று கெஸட்டியர் பிரசுரம் செய்தவர் எடுத்துக்காட்டி இருக்கிறார். சிருங்கேரிக்கு ஸமீபத்திலேயே பாதாமி என்ற ஊரில் அரசாண்ட சாளுக்கிய விக்ரமாதித்யன் 655லிருந்து 680 வரை இருந்திருக்கிறான். அவனுடைய அரசாட்சியை வைத்து ஸ்ரீ சங்கரரின் அவதாரத்திற்காக குறிப்பிட்டிருக்கும் வருஷப் பெயரை கவனித்தோமேயானால் ஸ்ரீ சங்கரர் 677ல் அவதரித்து 709ல் திரோதானமானார் என்று ஏற்படும். ஸுரேசுவரருக்கு ஸந்யாஸம் 693, பீடாதிபத்யம் ஆரம்பம் 709, ஸித்தி 773 என்று ஏற்படும். ஸாமான்யமாக சுமார் 70 வருஷம் பீடத்தில் இருந்தார் என்பதும் ஒத்துப்போகும். எப்படியும் அவர் ஏழாவது அல்லது எட்டாவது நூற்றாண்டிலேயே இருந்திருக்கவேண்டும். ஒன்பதாவது நூற்றாண்டு என்று சொல்வதற்கு அவசியமில்லை.

இந்த விஷயத்தில் வேறொரு விஷயமும் குறிப்பிட வேண்டிய அவசியமிருக்கிறது. பிரஹ்மஸூத்ரபாஷ்யத்திற்கு வியாக்யானம் எழுதமுடியாமல் போனதற்கு அவருக்கு ஸமாதானம் சொல்லும்போது அவர் மறுபடியும் வாசஸ்பதியாகப் பிறந்து தன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று ஸ்ரீ சங்கரர் சொன்னதாக மாதவீய சங்கர விஜயத்தில் காண்கிறது. பின்னால் பிரஹ்மஸூத்ர பாஷ்யத்திற்கு வாசஸ்பதி மிஸ்ரர் எழுதிய பாமதி என்ற வியாக்யானத்தையே குறிப்பிடுகிறதென்று தெரிகிறது. வாசஸ்பதி மிஸ்ரர் இந்த கிரந்தத்தை இளம் பருவத்திலேயே எழுத ஆரம்பித்து முதிர்ந்த வயது காலத்தில் ஸமாப்தி செய்துவிட்டு

நிமிர்ந்து பார்க்கும்போது தன் ஸமீபத்தில் ஒரு கிழவி நிற்பதை பார்த்து யாரம்மா என்று கேட்கும்போது நான் தங்கள் பார்யை, என்று அவள் சொன்ன பிற்பாடுதான் தனக்கும் வயதாகிவிட்டதை அவர் உணர்ந்தார். தான் எடுத்த காரியத்திற்கு எவ்வித இடைஞ்சலுமில்லாமல் மிகப் பொறுமையுடன் பக்தியுடன் ஸேவை செய்து வந்த அவளிடத்தில் விசேஷமான திருப்தி ஏற்பட்டு, ஸாமான்யமாக ஸ்திரீகளுக்கு ஸந்தானத்தில் அபேக்ஷை இருக்குமென்பதையும் இவள் அதற்கு வேண்டிய வயதைத் தாண்டி விட்டதையும் உணர்ந்து, இவள் கீர்த்தி உலகத்தில் சாசுவதமான பிரஸித்தியுடன் இருக்க வேண்டுமென்று தீர்மானித்து பாமதி என்ற அவள் பெயரையே அந்த கிரந்தத்திற்கு ஏற்படுத்தினார். அவ்விதம் ஒரு கிரந்தம் எழுதவேண்டுமேயானால் இருபது வருஷம் கூட போதாது என்று அறிவாளிகள் சொல்லுகிறார்கள். அது 841ல் எழுதப்பட்டதாகத் தெரிகிறது. அதற்கு 30 வருஷங்களுக்கு முன்னாலேயே ஆரம்பித்திருக்க வேண்டுமென்று தெரிகிறது. வாசஸ்பதி மிஸ்ரர் பிறந்து வெகு நாள் சென்ற பிறகு 834ல் தான் ஸுரேசுவரர் ஸித்தியானார் என்றால் வாசஸ்பதி மிஸ்ரர் ஸுரேசுவரருடைய அவதாரம் என்ற நம்பிக்கைக்கு அவகாசமே இல்லாமல் போய்விடும். ஆகையால் ஸுரேசுவரருடைய ஸித்தி 773 என்பதுதான் உசிதமாகத் தோன்றுகிறது.

வித்யானந்தர் என்ற ஜைன ஆசார்யர் 751லிருந்து 783 வரை இருந்தவர் ஸுரேசுவரருடைய பிருஹதாரண்யக பாஷ்ய வார்த்திகத்திலிருந்து தன்னுடைய அஷ்ட ஸாஹஸ்ரீ என்ற கிரந்தத்தில் உதாஹரித்திருப்பதாகத் தெரிகிறது. ஸுரேசுவரர் ஸந்யாஸம் வாங்கிக்கொண்டதே 813. அதற்கு பிறகு வார்த்திகம் எழுதப்பட்டது என்றால் இது ஒத்துவராது.

ஸுரேசுவரரை ஸங்க்ஷேப சாரீரகம் எழுதின ஸர்வக்ஞாத்மாவின் குருவான தேவேசுவரபாதர் தான் என்று 10வது நூற்றாண்டிற்கு ஸுரேசுவரரைக் கொண்டு போகவும் அவசியமில்லை. 978ல் கேரள தேசத்தை ஆண்டுவந்த மனுகுலாதித்யனை ஸர்வக்ஞாத்மா

குறிப்பிட்டிருக்கிறார். தவிரவும் அவரே எழுதின பிரமாண லக்ஷணம் என்ற வேறு கிரந்தத்தில், தான் சிரேஷ்டானந்தருடைய சிஷ்யரான தேவாநந்தருடைய சிஷ்யரான தேவேசுவரருடைய சிஷ்யரென்று வ்யக்தமாகக் கண்டிருக்கிறபடியால் ஸுரேசுவரருக்கு எவ்வித ஸம்பந்தமுமில்லை.

பிருஹதாராண்யக பாஷ்ய வார்த்திகத்தில் பௌத்தாசார்யரான தர்மகீர்த்தி என்பவரை பெயர் சொல்லியே குறிப்பிட்டிருக்கிறபடியாலும் அந்த தர்மகீர்த்தி 695ல் சீனா தேசத்திலிருந்து நம் தேசத்திற்கு வந்த ஒரு யாத்திரிகர், தனக்கு ஸமகாலத்தவர் என்று சொல்லி இருப்பதாலும் ஸுரேசுவரர் ஏழாவது நூற்றாண்டிற்கு முன்னால் இருந்தார் என்று சொல்லுவதும் ஸாத்யமில்லை.

ஸ்ரீ ஸுரேசுவராசார்யருடைய ஸமாதி சிருங்கேரியில் ஏற்பட்டு அங்கு பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும் மஹாலிங்கம் நித்யம் பூஜிக்கப்பட்டு வருகிறது. வெளிப்படையான இந்த ஞாபகார்த்த சின்னத்தைவிட அவர் இயற்றியிருக்கும் விஸ்தாரமான கிரந்தங்கள் உலகத்தில் சாசுவதமான கீர்த்தியை அடைந்து தத்துவம் அறிந்து கொள்ளவேண்டுமென்று நினைப்பவர்கள் எல்லோருடைய கிருதஞ்ஞதைக்கும் பாத்திரமாக இவர் இருந்து வருகிறார் என்பதே மேலான ஞாபகார்த்த சின்னமாகும்.

OOOOOOOOOOOO சுபமஸ்து OOOOOOOOOO

